# கல்கி

KALKI 22.3.92 ரூ. 3.00

பொன்விழா ஆண்டு



# எல்.ஐ.ஸி.
# வழங்கும் புதிய
# 'இரட்டை காப்பு' திட்டங்கள்.

## 'ஜீவன் சாத்தி'
(உயிர் துணை)

இத்திட்டம் குறிப்பாக வேலைக்குச் செல்லும்
தம்பதிகளை மனதில் கொண்டு
அக்குடும்பங்களின் முழுமையான ஆயுள்



பாதுகாப்பிற்காக உருவாக்கப்பட்டுள்ளது. புனித
திருமண உறவு ஒரு தொடர் பந்தம் என்பதற்கு
எடுத்துக்காட்டு இத்திட்டம். இத்திட்டத்தின் கீழ்
கணவனும் மனைவியும் ஒருங்கிணைந்துதான் பாலிஸி
எடுத்துக்கொள்ள முடியும்.
பாலிஸி காலம் நிறைவானதும் அடிப்படை
காப்புத்தொகையுடன் போனஸும் அளிக்கப்படும்.
பாலிஸி காலத்தில் தம்பதியரில் ஒருவர் காலமாகி
விட்டால் அடிப்படை காப்புத்தொகை எஞ்சியவருக்கு
அளிக்கப்படுவதுடன் அவர் மேலும் பிரீமியம் எதும்
கட்ட வேண்டியதில்லை.
பாலிஸி கெடு முடிவடைந்ததும் மீண்டும் ஒரு முறை
அடிப்படை காப்புத்தொகையும் போனஸும்
வழங்கப்படும்.
பாலிஸி கெடு முடியும் முன் தம்பதியில் எஞ்சியவரும்
இறந்துபடின் அவரது வாரிசுக்கு இத்தொகைகள்
அளிக்கப்படும்.

## 'ஜீவன் மித்ர'
(உயிர் நண்பன்)

ஒரு குடும்பத்தின் மிகச்சீரிய ஆயுள்
பாதுகாப்பிற்காக உருவாக்கப்பட்டிருப்பது
இத்திட்டம்.



அமுலில் இருக்கும் ஆயுள் காப்புத்திட்டங்கள்
போல், இதிலும் பாலிஸி கெடு முடிவடைந்ததும்
அடிப்படை காப்புத்தொகையும் போனஸும்
அளிக்கப்படுகிறது.
எதிர்பாராமல் கெடு காலம் முடிவடையும் முன்பு
பாலிஸிதாரர் இறந்துவிடில் அவரது வாரிசிற்கு
இரட்டை அடிப்படை காப்புத் தொகையும்,
அடிப்படை காப்பிற்கு உண்டான போனஸும்
வழங்கப்படும்.
சிறிது அதிக பிரீமியம் செலுத்துவதால் விபத்தில்
பாலிஸிதாரர் உயிர் நீத்தால் அதிக காப்புத்
தொகையும் பெற முடியும்.

**இந்த 'இரட்டை காப்புத் திட்டங்கள்' பற்றி
மேலும் அறிய உங்களது முகவரையோ
அல்லது அண்மையில் உள்ள எல்.ஐ.ஸி.
அலுவலகத்தையோ அணுகுங்கள்.**

daCunha LIC 15 92 TM



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

## தமிழக காங்கிரஸ் :

# கோஷ்டிகள் பலவிதம்! ஒவ்வொன்றும் ஒருவிதம்!


ப. சிதம்பரம்


குமரி அனந்தன்


திண்டிவனம் ராமமூர்த்தி


தங்கபாலு


அன்பரசு


அருணாசலம்

எல்லாக் கட்சிகளிலும்தான் கோஷ்டிகள் உள்ளன என்றாலும் காங்கிரஸில் கொஞ்சம் தூக்கல்தான். அதிலும் தமிழ்நாடு காங்கிரஸில் ஒரு நோயாகவே வளர்ந்து விட்டது.

மிகச் செல்வாக்கான குழுவை நடத்திச் செல்பவர்கள் மூப்பனார் அணியைச் சேர்ந்தவர்கள். கட்சித் தலைமையிடத்தில் செல்வாக்கு இருப்பதால் மிக வெற்றிகரமாக 'அரசியல்' செய்து கொண்டிருக்கிறார்கள். திண்டிவனம் ராமமூர்த்தி, எதிர்க்கட்சித் தலைவர் எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், எஸ். கே. டி. ராமச்சந்திரன், மத்திய அமைச்சர் அருணாசலம் ஆகியோர் இந்தக் குழுவில் முக்கியமானவர்கள்.

எதிர்கோஷ்டியைப் பற்றி அறிக்கை விட வேண்டுமானால் திண்டிவனம் ராமமூர்த்தி முன் நிற்பார். பத்திரிகை பலமும் இவர்களுக்கு உண்டு. சமீபத்தில் இந்த அணிக்கு மாறியிருப்பவர் க. சுப்பு. காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினர்களில் குறைந்தபட்சம் 12 பேர் மூப்பனார் ஆதரவாளர்கள். அதே போல் சட்டமன்றத்தில் 29 பேர். இன்று இருக்கும் மாவட்டத் தலைவர்களில் பத்து மாவட்டங்களில் இவர்கள் குழுவைச் சேர்ந்தவர்கள்தான் தலைவர்களாக இருக்கிறார்கள். வாழப்பாடி தமிழக


மரகதம் சந்திரசேகர்


ரங்கராஜன் குமாரமங்கலம்


பொன்னுசாமி


எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்





☛ பிரபு

☛ க. சுப்பு

காங்கிரஸ் தலைவரானதிலிருந்து இந்தக் குழுவைச் சேர்ந்தவர்கள், காங்கிரஸ் கட்சியின் அலுவலகமான சத்தியமூர்த்தி பவனுக்கு வருவதேயில்லை. மூப்பனார் வீடுதான் இவர்கள் சந்திக்கும் இடம்.

தலைவரான பிறகு தமக்காகத் தனி கோஷ்டியை உருவாக்கிக் கொண்டவர் வாழப்பாடி. இந்தக் குழுவில் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியவர்கள் ரங்கராஜன் குமாரமங்கலம், முன்னாள் மத்திய அமைச்சர் பிரபு, துளசி அய்யா வாண்டையார், அன்பரசு, தண்டாயுதபாணி ஆகியோர். பாராளுமன்ற உறுப்பினர்களில் 13 பேர் இவர் பக்கம் இருக்கிறார்கள். குறைந்த பட்சம் 28 சட்டமன்ற உறுப்பினர்கள் இவர் ஆதரவாளர்கள். பிரச்னையைப் பொறுத்து மணிசங்கர் அய்யரும் அவ்வப்போது சேர்ந்து கொள்கிறார்.

ராஜீவ் உயிருடன் இருந்த போது, இந்த கோஷ்டியின் குரல் அவ்வப்போது எடுபட்டு வந்தது. இப்போது கட்சித் தலைமை இவர்களைக் கண்டுகொள்வதேயில்லை. கிட்டத்தட்ட பதினேழு மாவட்டத் தலைவர்கள் இவர் பக்கம் இருக்கிறார்கள். சத்தியமூர்த்தி பவனில் வாழப்பாடிக்கு உ த வு ப வ ர் க ள் தண்டாயுதபாணி, பொன்னுச்சாமி (பொதுச் செயலாளர்), தாமோதரன் (இணைச் செயலாளர்). பத்திரிகைகளுக்கு அறிக்கைகள் தயார் செய்பவர் இன்னிவளவன்.

இந்த இரு கோஷ்டிகளைப் போல் செல்வாக்காக இல்லாவிட்டாலும், 'தமக்கொரு பாதை'யாகச் செயல்படுவது மரகதம் அம்மாள் குழு. மூன்று சட்டமன்ற எம். எல். ஏக்கள் இவர் பக்கம் இருக்கிறார்கள். ராஜீவ் கொலைக்கு அப்புறம் வாழப்பாடி கோஷ்டி மீது மிகக் கோபத்துடன் இருப்பவர்கள். இதனால் சட்டமன்றக் காங்கிரஸ் தலைவர் தேர்தல் நடந்த போது, மூப்பனார் வேட்பாளரான எஸ். ஆர். பாலசுப்ரமணியத்தை இவர்கள் ஆதரித்தார்கள். கட்சியின் பார்லிமென்டரி போர்டு மெம்பராக மரகதம் இருப்பதால் குறைந்தபட்சம் அவருக்கும், அவருக்கு வேண்டியவர்களுக்கும் தேர்தலில் ஸீட் வாங்கிக் கொள்ள முடிகிறது.

இவை தவிர, தனி ஆவர்த்தனம் வாசிப்பவர்களும் இருக்கிறார்கள். மத்திய அமைச்சர் ப. சிதம்பரம், சுதந்திரமாக யோசிக்கக் கூடியவர். இவரை ஒரேயடியாக மூப்பனார் குழு என்று கூறி விட முடியாது. அதே போல் தங்கபாலு. இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருந்தவர். கட்சியின் அடிமட்டத் தொண்டர்களிடம் செல்வாக்கு உண்டு. பிரச்னைகளுக்குத் தகுந்தபடி செயல்படுபவர். குமரி அனந்தன் நடுநிலையில் இருப்பவர். இப்படிப் பலர்!

இந்த கோஷ்டிகள் எல்லாவற்றுக்கும் சமீப காலத்தில் ஓர் ஒற்றுமை உண்டாகி இருக்கிறது. சட்டமன்றத்தில் புரட்சித் தலைவிக்கு அடிக்கும் ஜால்ராதான் அது. மூப்பனார் கோஷ்டியைச் சேர்ந்த எஸ். ஆர். பாலசுப்ரமணியம், பீட்டர் அல்போன்ஸ், வாழப்பாடி அணியைச் சேர்ந்த சிங்காரம், பன்னீர் செல்வம் ஆகிய பலரும் புரட்சித் தலைவியைப் புகழ்வதில் கஞ்சத்தனம் பார்ப்பதே கிடையாது.

''ஒரு சட்டமன்றத் தொடர் ஆரம்பிக்கும் முன்னர் உறுப்பினர்களின் கூட்டத்தைக் கூட்டி, அந்தத் தொடரில் என்ன உத்தி (strategy) யைக் கையாள்வது என்பது தீர்மானிக்கப்பட வேண்டும். ஆனால் எங்கள் கட்சியில் அதெல்லாம் நடப்பதே இல்லை. விலைவாசி உயர்வுக்கு மாநில அரசும் ஒரு காரணம் என்பதைச் சற்று அழுத்தமாகச் சொல்லக் கூட யோசிக்கிறார்கள் எங்கள் காங்கிரஸ் உறுப்பினர்கள்'' என்று வருத்தத்துடன் சொல்கிறார், மரகதம் கோஷ்டியைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர் போளூர் வரதன்.

''தமிழக காங்கிரஸ் வாழப்பாடி அணியினர் பொறுப்பில் இருந்தாலும், நாங்களும் வெற்றிகரமாக எதிர்நீச்சல் போட்டுக் கொண்டிருக்கிறோம். ஆனால் வாழப்பாடியார் பதவியில் இல்லையென்றால் அவர் பக்கத்தில் ஆட்களைத் தேட வேண்டியிருக்கும்'' என்கிறார் மூப்பனார் அணியைச் சேர்ந்த முனவர் பாட்சா.

''தமிழ்நாட்டில் அடிமட்டத் தொண்டர்களின் ஆதரவு வாழப்பாடியாருக்குத்தான் உண்டு. பதவியில் இருந்தாலும், இல்லாவிட்டாலும், ஆதரவு குறையாது'' என்கிறார் வாழப்பாடியின் ஆதரவாளரான சக்தி வடிவேல்.

ஆக, மூக்கிருக்கும் வரை ஜலதோஷம் என்கிற கதைதான்!

– பி. எஸ்.

படங்கள் : ராஜன்

ஃபாஷன் பக்கம் :

# வெயிலின் வேதனை தெரியாமலிருக்க!

- வெளிர் நிறங்களில் காட்டன் ஷர்டுகள்

அல்லது

- கொஞ்சமாக பாலியஸ்டர் இழையுடன் பெரும்பகுதி காட்டன் கலந்த blended ஷர்டுகள்
- இறுக்கிப் பிடிக்காத 'பாகி' பாண்ட்
- வியர்வையை உறிஞ்சும் பருத்தியால் உட்புறமும், கண்கவரும் நைலான் மேல்புறமும் கொண்ட சௌகரியமான ஸாக்ஸ்....
- அறுபதுகளில் ஃபாஷனாய் இருந்த அகலக் குறைவான கறுப்புக் கண்ணாடி.....

'இந்த வருஷம் கோடைக் காலத்தைச் சிரமம் தெரியாமல் ஓட்டி விடுவேன்' என்கிறார் படத்தில் சிரிக்கும் இளைஞர்.

நன்றி : ரேமண்ட்ஸ் வெளியீடு



**தமிழக காங்கிரஸ் :**

# மனித குண்டுகள் இந்தக் கோஷ்டிப்

**ரா**ஜீவ் காந்தியின் உடலைத் தில்லிக்கு அனுப்பி வைத்த கையோடு, படுகொலையைத் தேர்தலுக்குச் சாதகமாக்கிக் கொள்ளும் நோக்கில், ''தி. மு. க. வின் சதித் திட்டம்'' என்று குற்றம் சாட்டினார் வாழப்பாடியார். சில குற்றச்சாட்டுக்களுக்குப் பதில் சொல்ல வேண்டிய நிலைக்குத் தாமே தள்ளப்படுவோம் என்பதை வாழப்பாடியார் அப்போது நினைத்துப் பார்த்திருக்க மாட்டார்!

ஒருபுறம் படுகொலையைத் தொடர்ந்து நியமிக்கப்பட்ட சிறப்புப் புலனாய்வுக் குழுவின் விசாரணைகளும் கைதுகளும் தொடர்ந்து கொண்டிருக்க, மறுபுறம், தமிழ்நாடு காங்கிரஸின் வெவ்வேறு கோஷ்டிகளிடையே புகைச்சலும், பூசலும் சீறி எழுந்தன.

'ஸ்ரீபெரும்புதூரில் கூட்டம் ஏற்பாடு செய்ததற்குக் காரணம் மரகதம் சந்திரசேகர் தான்; அது தமிழ்நாடு காங்கிரஸ் தலைமையைக் கேட்காமலேயே ஏற்பாடு செய்யப்பட்ட கூட்டம்' என்று நிரூபிப்பதில் வாழப்பாடி கோஷ்டி தீவிரமாகியது.



ஒன்றுபடுவார்களா?

இதர கோஷ்டியினரோ கொலைகாரி, தனுவுக்குப் பக்கத்தில் நின்ற லதா கண்ணன், வாழப்பாடியாரால் நியமிக்கப்பட்ட நகரச் செயலாளர் என்றும் தி. மு. க. விலிருந்து விலகி வந்தவுடனேயே அவருக்குப் பதவி கொடுக்கப்பட்டதெப்படியென்றும் கேட்கத் தொடங்கினார்கள்.

இதற்குப் பதில் சொல்லும்விதமாக, தனு, மரகதம் சந்திரசேகருக்கு மிகவும் வேண்டியவர் என்றும் அவர் மகள் லதா பிரியகுமாருடன் காரில் சேர்ந்து சென்றவர் என்றும் வாழப்பாடியார் கோஷ்டி தாக்குதல் நடத்தியது.

இந்த கோஷ்டிக் குற்றச்சாட்டுக்களைத் தூக்கிச் சாப்பிடும் விதமாக, ஜெயிலிலிருக்கும் பாக்கியநாதன் ஓர் அணுகுண்டைத் தூக்கிப் போட்டார். 'போட்டோகிராபர் ஹரிபாபுவுடன், சிவராஜனும் வாழப்பாடியைச் சந்தித்திருக்கிறார். சிவராஜனுடன் வாழப்பாடியார் படம் எடுத்துக் கொண்டிருக்கிறார். இந்த விஷயம் தற்சமயம் சி. பி. ஐ. வசமுள்ள சிவராஜன் டயரியில் இருக்கிறது' - இதுதான் பாக்கியநாதனின் வாக்குமூலம்.

இதன் பிறகு, ஒரு சிலிர்ப்புடன், மற்ற கோஷ்டிகள் விழித்துக் கொண்டன. 'உண்மையான காங்கிரஸ்காரன் இந்தக் கொலையில் சம்பந்தப்பட்டிருக்க மாட்டான். இருந்தாலும் உண்மையைக் கண்டறிய காங்கிரஸார் ஒத்துழைக்க வேண்டும்' என்று மூப்பனார் கோஷ்டியைச் சேர்ந்த திண்டிவனம் ராமமூர்த்தி அறிக்கை விட்டார். 'சிவராஜனை சந்தித்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. எந்த விசாரணைக்கும் நான் தயார்!' என்று பதில் அறிக்கை விட்டார் வாழப்பாடியார்.

கைது செய்யப்பட்ட சுபா சுந்தரத்தை விடுதலை செய்ய வாழப்பாடி முயன்றார் என்பது திண்டிவனத்தின் அடுத்த குற்றச்சாட்டு. இதற்குப் பதில் சொல்லும் விதமாக, வாழப்பாடியின் சிஷ்யர்களான தண்டாயுதபாணியும், பொன்னுசாமியும்,



தனு



சிவராசன்

# சல்கள்!



குமுதவல்லி



பாக்கியநாதன்

திண்டிவனத்தைத் தனிப்பட்ட விதத்தில் தாக்கும் விதமாக அறிக்கை விட, உடனே திண்டிவனம், அவர்கள் மீது மானநஷ்ட வழக்குப் போட்டிருக்கிறார். போதாததற்கு 'ஸூட்கேஸ்' கதையெல்லாம் எடுத்து விட வேண்டியிருக்கும் என்றும் எச்சரிக்கை செய்யவே, விஷயம் தற்போது அடங்கி இருக்கிறது.

இதற்கிடையில் குமுதவல்லி என்ற பெண்மணி வர்மா கமிஷனிடம் ஒரு வாக்குமூலம் தாக்கல் செய்திருக்கிறார். 'லதா கண்ணன், மரகதம் அம்மாளின் மகள் லதா பிரியகுமாருடன், ஸ்ரீபெரும்புதூருக்கு ஒரே காரில் வந்தார். பின்னர் கொலைகாரி தனுவுடன் பேசினார்' என்பது வாக்கு மூலத்தின் சாரம். இதை மரகதம் கோஷ்டி மறுக்கிறது. 'வாழப்பாடியாரின் 'கிராமப் புற தொழிலாளர் அமைப்பு' என்ற சங்கத் தில் பொறுப்பில் இருக்கிறார் குமுதவல்லி; அவருக்கு மிகவும் வேண்டியவர். ஆகவே எங்கள் தலைவியையும் அவருடைய குடும் பத்தையும் வேண்டுமென்றே வம்புக்கிழுக் கிறார்' என்று கூறுகிறது மரகதம் கோஷ்டி.

வர்மா கமிஷனிடம் வாக்குமூலம் கொடுத்ததில் மட்டுமின்றிக் குறுக்கு விசா ரணையிலும் கூட கோஷ்டி மோதல்கள் பிரதிபலித்திருக்கின்றன. ஸ்ரீபெரும்புதூர் கூட்டத்தை ஏற்பாடு செய்ததற்குத் தாங்கள் பொறுப்பல்ல என்று தப்பிப்பதற்கு வாழப்பாடி, மரகதம் இரண்டு பேருமே முயன்று கொண்டிருக்கிறார்கள். 'கூட்ட ஏற்பாடுகளைப் பற்றிப் பேச என் செய லாளர்களை அனுப்பினேன்' என்கிறார் வாழப்பாடி. 'அவர்கள் என்னைச் சந்திக்கவேயில்லை' என்கிறார் மரகதம். இந்த முரண்பாடுகளை வர்மா கட்டாயம் கண்டுகொள்வார்.

இதற்கிடையில் ராஜீவ் கொலை வழக் குக்கான தனிக் கோர்ட்டில் சி. பி. ஐ. வழக் கறிஞர் 'வாழப்பாடியாரின் பெயர் சிவ ராஜன் டயரியில் இல்லை' என்று சொல்லி யிருக்கிறார். ஆயினும் அவர் டயரியை கோர்ட்டில் தாக்கல் செய்ய வில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

தேர்தல் நேரத்தில் தி. மு. க. வை ஒழித்துக்கட்டப் பயன்பட்ட குற்றச்சாட்டு, இப்போது காங்கிரஸின் உட்பூசல்களி லேயே பரஸ்பரம் பரிமாறிக் கொள்ளப் பட்டு, காங்கிரஸையே சிறிது சிறிதாக அழித்து வருகிறது!

– கௌசல்யா

## அடுத்த இதழ்...
## வேலூர் நகரச் சிறப்பிதழ்

●● வொர்த், சோலை
- வேலூரின் பெருமை சேர்க்கும் அமைப்புகள்

●● சந்திரசேகரன்
- ஆச்சர்யமான மனிதர்

●● அழிந்துவரும் பாரம்பரியக் கலை!
- சிறப்புக் கட்டுரை

●● வித்தியாசமான கலெக்டர், வித்தியாசமான அதிகாரி மற்றும் எம். எல். ஏ. பேட்டி

# கோஷ்டிப் பூசலில் சிக்கிய தேர்தல்

காங்கிரஸில் உள் கட்சித் தேர்தல் என்கிற கலாசாரம் ஒழிந்து போய்க் கிட்டத்தட்ட இருபது வருடங்கள் ஆகிவிட்டன. 1972 ல் கடைசியாகத் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியில் (அப்போது காங்கிரஸ் - ஆர்) தலைவர் தேர்தல் நடந்தது. அதற்கப்புறம் ஸ்தாபன காங்கிரஸும், இந்திரா காங்கிரஸும் இணைந்து ஒன்றான பின், தேர்தல் என்ற பேச்சே எழவில்லை! வார்டு தலைவரிலிருந்து, மாநிலத் தலைவர் வரை எல்லாமே நியமனம்தான். தேர்தல் என்று அவ்வப்போது தேதிகள் அறிவிக்கப்படும், அவ்வளவுதான்.

1991 ம் ஆண்டு துவக்கத்தில் ராஜீவ் காந்தி, 'இந்த ஆண்டு உறுதியாகக் கட்சித் தேர்தல் நடந்தே தீரும்' என்று அறிவித்தார். முதலில் யாரும் இதைத் தீவிரமாக எடுத்துக் கொள்ளவில்லை. பின்னர் நரசிம்மராவ் பதவிக்கு வந்த போது, கட்சித் தேர்தல் நடவடிக்கைகள் தீவிரமடைந்தன. கடைசியில் இந்த வருடம் பிப்ரவரி மாதம் பல மாநிலங்களில் காங்கிரஸ் கட்சித் தேர்தல் நடந்தது. ஆனால் தமிழ் நாட்டில் நடக்கவில்லை. இதற்குக் காரணம் மூப்பனார் - வாழப்பாடியார் கோஷ்டித் தகராறுதான் என்று சொல்ல வேண்டியதில்லை. தமிழக காங்கிரஸின் பங்கு இல்லாமலேயே அகில இந்திய காங்கிரஸ் தலைவர் தேர்தல் நடந்து முடிந்து விட்டது. என்ன பிரச்னை?

''கட்சித் தேர்தல் நடத்துவது என்று தீர்மானித்த பின், புதிய உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டியிருந்தது. இதற்கு 2,80,000 உறுப்பினர் புத்தகங்கள் அச்சடிக்கப்பட்டன. ஒவ்வொரு புத்தகத்திலும் 25 உறுப்பினர் தாள்கள் இருக்கும். 'இந்தப் புத்தகங்கள் எங்களுக்குச் சரியான முறையில் வழங்கப்படவில்லை' என்பது மூப்பனார் நண்பர்களின் குற்றச்சாட்டு. ஆனால் ''இது உண்மையல்ல. கிட்டத்தட்ட ஒரு லட்சம் புத்தகங்கள் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. திண்டிவனம் ராம மூர்த்தி அவர்களே கையெழுத்துப் போட்டு மூப்பனார் சார்பில் 31,600 புத்தகங்கள் வாங்கிக் கொண்டு போனார். இது தவிர, அவர்கள் குழுவைச் சேர்ந்த எம்.எல்.ஏக்கள், எம்.பிக்கள், மாவட்டத் தலைவர்கள் எல்லோருக்கும் புத்தகம் விநியோகிக்கப்பட்டது. இன்னமும் சொல்லப் போனால் எங்கள் குழுவைச் சேர்ந்த மாவட்டத் தலைவர்களிடமிருந்து கூட அவர்கள் கோஷ்டி புத்தகங்களை வாங்கியுள்ளது. இது தவிர மரகதம் அம்மாள், தங்க பாலு, வைஜயந்தி மாலா ஆகியோருக்கும் புத்தகங்கள் கொடுக்கப்பட்டன. இப்படியிருக்க, புத்தகங்கள் சரிவரக் கொடுக்கப்படவில்லை என்பதை எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்?'' என்று கேட்கிறார் வாழப்பாடியின் சிஷ்யரும், தமிழ்நாடு காங்கிரஸின் பொதுச் செயலாளருமான பொன்னுசாமி.

''ஏதோ இவர்கள் எடுத்த எடுப்பிலேயே புத்தகங்கள் கொடுக்கப்பட்டது போலப் பேசுகிறார்கள். தேர்தல் விஷயமாக அகில இந்தியப் பார்வையாளர்கள், ஜெகன்னாத் பகாடியா, பல்ராம் ஜாக்கர் போன்றோர் வந்த போது நாங்கள் முறையிட்டோம். அதன் பின்னரே புத்தகங்கள் கொடுக்கப்பட்டன. மேலும் இவர்களது நோக்கம் போலி உறுப்பினர்களைச் சேர்த்து, அ.தி.மு.க. தோழர்களின் உதவியோடு கட்சிப் பொறுப்புகளைக் கைப்பற்றுவதுதான். ஓர் இடைக்காலத் தலைவரைப் போட்டுத் தேர்தல் நடத்தினால்தான் தேர்தல் நியாயமாக நடக்கும்'' என்பது மூப்பனார் குழுவைச் சேர்ந்தவர்களின் வாதம்.

புத்தகங்கள் விநியோகிப்பதில்தான் குற்றச்சாட்டுக்கள் என்றால், வசூல் செய்த உறுப்பினர் கட்டணத்தை முறைப்படி வங்கியில் கட்டாதது பற்றியும் ஒருவர் மீது ஒருவர் குற்றம் சாட்டிக் கொண்டிருக்கிறார்கள். கட்சி விதிகளின் படி, உறுப்பினர் கட்டணத் தொகையை, அகில



☛ தமிழகத்தின் பங்கு இன்றியே அ.இ.கா. தலைவர் தேர்வு

இந்தியத் தேர்தல் பார்வையாளரும், தமிழக காங்கிரஸ் தலைவரும், சேர்ந்து வங்கிக் கணக்குத் துவங்கி, அதில் போட வேண்டும்.

''கிட்டத்தட்ட 95,000 புத்தகங்களுக் கான பணத்தை நாங்கள் தமிழ்நாடு காங் கிரஸின் கணக்கில் (தேனாம்பேட்டை ஐ.ஓ.பி.யில்) கட்டி விட்டோம். ஆனால்

பணம் எங்கேயும் போகலை: முறைப்படி அ.இ.கா. கமிட்டியில் டெபாசிட் ஆகும்'



மூப்பனார் அணியினர் வசூல் செய்த பணத்தை எந்த வங்கியிலும் கட்ட வில்லை. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியி லிருந்து புத்தகங்களைப் பெற்றுக் கொண்டு போனவர்கள் பணத்தை இங்கேதானே கட்ட வேண்டும். அது தானே நியாயம்!'' என்று கேட்கிறார் பொன்னுசாமி.

''விதிப்படி இவர்கள் வங்கிக் கணக்கு ஆரம்பிக்கவில்லை. 'கு ம் ப லே ா டு கோவிந்தா' என்று கட்சிக் கணக்கில் பணத் தைப் போட்டு வைத்திருக்கிறார்கள். நாங்கள் வசூல் செய்த பணம் எங்கேயும் போகவில்லை. முறைப்படி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் டெபாஸிட் செய்யப் போகிறோம். இப்போது தாற் காலிகமாக பழனியாண்டி பெயரில், டி.என்.எஸ்.ஸி வங்கியில் போட்டு வைத் திருக்கிறோம்'' என்கிறார்கள் மூப்பனா ரைச் சேர்ந்தவர்கள்.

இந்தப் பிரச்னைகள் சூடாகிக் கொண் டிருக்கும் போதே வாழப்பாடியார் கோஷ் டியைச் சேர்ந்த எம்.பிக்களும், எம்.எல். ஏக்களும், இரண்டு முறை பிரதமரைச் சந்தித்துத் தேர்தலை உடனடியாக நடத்த



பணத்தை இங்கேதானே கட்டணும். அதுதானே நியாயம்?

வேண்டும் என்று வற்புறுத்தி இருக்கி றார்கள். ஆனாலும் பலன் பூஜ்யம்தான். மற்ற மாநிலங்களுக்குத் தேர்தல் தேதி அறி வித்த போது, தமிழ்நாட்டுக்கு அறிவிக்கப் படவில்லை.

''கட்சித் தலைமை கேட்ட எல்லா தஸ் தாவேஜுகளையும் கொடுத்தாகிவிட்டது. தேர்தல் நடத்த நாங்கள் தயாராக இருக்கி றோம். போலி உறுப்பினர் என்றெல்லாம் கதை விட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஒவ் வொரு வோட்டுச் சாவடி மட்டத்திலிருந் தும் தேர்தல் நடக்க இருக்கிறது. உறுப்பி னர்களின் பட்டியலில் ஏதாவது சந்தேகம் இருக்குமானால் அப்பீல் கமிட்டியெல் லாம் இருக்கிறது. பிரச்னையைச் சரி செய்த பிறகே தேர்தல் நடைபெறும். கட்சிக்குள் தேர்தல் நடந்தால் தங்கள் போலித்தன்மை எங்கே வெளிப்பட்டு விடுமோ என்று அஞ்சித் தேர்தலைத் தள்ளிப் போடப் பார்க்கிறார்கள் இங்குள்ள சில தலை வர்கள். அவர்கள் நோக்கம் நிறைவேறாது. தேர்தல் நடந்தே தீரும்'' என்றார் வாழப் பாடி ராம மூர்த்தி.

இதற்கிடையில் மூப்பனார் குழுவினர் மிகவும் உற்சாகமாக இருக்கிறார்கள். கார ணம், அடுத்த மாதம், திருப்பதியில் காங் கிரஸ் மாநாடு நடப்பதற்கு முன்பு, தமிழ கத்தில் கட்சித் தேர்தல் நடத்த அட்ஹாக் கமிட்டி போட இருப்பதாக டெல்லியில் இருந்து தகவல் வந்து இருக்கிறதாம். ஆனால் வாழப்பாடியார் கோஷ்டி இந்த வதந்தியைப் பற்றிக் கவலைப்படவில்லை. ''புதிய ஜனாதிபதி தேர்தல் நடக்கவிருக் கும் ஜூலை மாதம் வரை எங்கள் தலை வரின் பதவிக்கு எந்த ஆபத்தும் வராது!'' என்று அவர்கள் உறுதியாகக் கூறு கிறார்கள்.

- திலீப்பா

காங்கிரஸ் - கழகங்கள் உறவு :

# முதுகுச் சவாரிக்கு முடிவே இல்லையா?

கடந்த இருபது வருடங்களாகத் தமிழ்நாட்டில் தேர்தலுக்குத் தேர்தல் திராவிட இயக்கங்களின் முதுகில் ஏறித் தான் சவாரி செய்து கொண்டிருக்கிறது காங்கிரஸ். சொந்தக் காலில் எப்போது நிற்பது என்பது பற்றி மத்திய காங்கிரஸ் தலைமை கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. அவர்களுக்கு ஒரே குறிக்கோள் நாடாளுமன்றத்தில் ஆதரவு. அதனால் திராவிட இயக்கங்களுக்கு விட்டுக் கொடுத்துக் கொண்டே போகிறார்கள்.

இவ்வாறு நிலைமை தொடர்வதால் தமிழக காங்கிரஸ் பாரம்பரியப் பெருமை இழந்து, மக்களிடையே செல்வாக்குக் குன்றி, பலமிழந்து வருகிறது என்பதை உணர்ந்து, இடையில் நிலைமையைச் சீர்திருத்த முயன்றவர் மூப்பனார் ஒருவரே. கடந்த தி. மு. க. ஆட்சியின் போது நல்லதொரு எதிர்க்கட்சியாக காங்கிரஸால் செயலாற்ற முடிந்தது. இதற்கு முன்னரும் பின்னரும் ஒரே சரணாகதிதான்.

சரணாகதியை ஆரம்பித்து வைத்தவர் இந்திரா காந்தி. வெறும் பத்து பாராளுமன்ற இடங்களுக்காகக் கழக உறவை காங்கிரஸ் நாடியது. அன்று - 1971-ல் கருணாநிதி பலமான அஸ்திவாரத்தில் உட்கார்ந்திருந்தார். 1972ல் எம். ஜி. ஆர். தி. மு. க. வை விட்டு விலகியபின் நடந்த திண்டுக்கல் இடைத் தேர்தலில் அ. தி. மு. க., தி. மு. க., இ. காங்கிரஸ், ஸ்தாபன காங்கிரஸ் ஆகிய அனைத்துமே போட்டியிட, அ. தி. மு. க. பெற்ற பிரமிக்கத்தக்க வெற்றி, தி. மு. க. வுடனான உறவை இ. காங்கிரஸ் தரப்பில் மறுபரிசீலனை செய்ய வைத்தது.



எமெர்ஜன்ஸிக்குப் பிறகு நடந்த நாடாளுமன்றத் தேர்தலில், ஜனதா - தி. மு. க. கூட்டணி அமைத்தன. மத்தியில் ஜனதா ஆட்சியே அமைந்தாலும் தமிழகத்தில் தி.மு. க. - ஜனதா கூட்டணி படுதோல்வி கண்டது. இ. காங்கிரஸ் - அ. தி. மு. க. கூட்டணியே இங்கு வென்றது.

தொடர்ந்து நடந்த சட்டமன்றத் தேர்தலிலும் அ. தி. மு. க. இ. காங்கிரஸ் கூட்டணி தொடரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் மத்தியில் ஜனதா ஆட்சி இருந்ததால் எம். ஜி. ஆர். நழுவினார். தனியே போட்டியிட்டுப் பதவிக்கு வந்தார்.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அ. தி. மு. க. - இ. காங்கிரஸ் உறவில் விரிசல் அகலமடைய, தி. மு. க. சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு இ. காங்கிரஸுடன் கூட்டணி அமைத்தது. இதற்கு வசதியாக ஜனதா ஆட்சி கவிழ, ''நிலையான ஆட்சி'' என்ற கோஷம் எழுப்பப்பட்டது. காங்கிரஸுக்கு 25, தி.மு.க வுக்குப் 15 என்று தொகுதி ஒதுக்கீடு. கூட்டணி மாபெரும் வெற்றி பெற்று, இந்திரா மறுபடி பிரதமரானார்.

எம். ஜி. ஆர். ஆட்சி கலைக்கப்பட்டு மறுபடி தமிழகத்தில் தேர்தல். இப்போது ஆளுக்குப் பாதி என்ற அளவில் தி. மு. க. வும் - காங்கிரஸும் தொகுதிப் பங்கீடு செய்து கொண்டன. வெற்றி பெற்றால் கருணாநிதியே முதல்வர் என்று இந்திரா ஒப்புக் கொள்ள, இதனால் கூட்டணியில் கசமுசா



ஏற்பட்டு ஒருவரை ஒருவர் வாரி விட்டனர். எம். ஜி. ஆரோ, ''என் ஆட்சியைக் கலைத்தது ஏன்?'' என்ற பரிதாபக் கேள்வியை எழுப்பியே மக்களின் அமோக ஆதரவு பெற்று விட்டார்.



**எம்.** ஜி. ஆரின் இந்த வெற்றி, தி. மு. க. - காங்கிரஸ் உறவில் மறுபடி பிளவை



ஏற்படுத்தியது. திருப்பத்தூர் சட்டமன்றத் தொகுதி இடைத் தேர்தலின் போது (1982) தி. மு. க. வும் அ. இ. அ. தி. மு. க. வும் தனித்தனியே மேடை போட்டு, காங்கிரஸ் வேட்பாளருக்கு ஆதரவு தெரிவித்தது பெரிய வேடிக்கை! மறுபடி அ. தி. மு. க. - காங்கிரஸ் கூட்டணி உருவாயிற்று. 1984 தேர்தலின் போது இந்திரா காந்தி இல்லை. எம். ஜி. ஆர். சிகிச்சைக்கு அமெரிக்கா சென்று விட, அ. தி. மு. க. வும் காங்கிரஸும் பாராளுமன்றத்துக்கு முறையே 15 - 25 என்ற விகிதத்திலும் சட்டமன்றத்தில் மூன்றில் இரண்டு பங்கு, மூன்றில் ஒரு பங்கு என்ற விகிதத்திலும் தொகுதி பிரித்துக் கொண்டன. இதுவரை இந்த எம். ஜி. ஆர். ஃபார்முலாதான் தொடர்கிறது.

**இ**திலிருந்து விடுபட்டு காங்கிரஸ் சொந்த வீட்டில் குடிபுகுவது எப்போதோ தெரியவில்லை. ஒருவேளை ஒண்டுக் குடித்தனம் நடத்துவதுதான் அதன் தலையெழுத்தோ!

தி. மு. க. வும் காங்கிரஸும் 1971 ம் ஆண்டுத் தேர்தலில் உறவு கொண்ட போதே, ''தமிழ்நாட்டில் காங்கிரஸின் அழிவு ஆரம்பமாகி விட்டது'' என்றார் மறைந்த காங்கிரஸ் தலைவர் ஓ. வி. அழகேசன். அழிவு இன்றும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

காங்கிரஸ் இருக்குமிடம் தெரியாமல் மறைந்து விடாதிருக்க வேணுமானால், கோஷ்டி பூசல்களைத் தவிர்த்து, சொந்தக் காலில் நின்றால்தான் முடியும். சொந்தக் காலில் நின்றால்தான் கோஷ்டிப் பூசல்களும் குறையும். காரணம், இப்போது பொறுப்பு இல்லை, வேலையும் குறைவு. சொந்தக்காலில் நின்றாலோ வேலைச் சுமையும் பொறுப்பும் அதிகரிக்க, கோஷ்டிப் பூசலுக்கே நேரமிராது அல்லவா!

– ஆர். எஸ்.

''ஏன் நிதியமைச்சர் வருத்தமாயிருக்கிறார்?''

''அடுத்த வருட பட்ஜெட்டை ரூபாயில் தயாரிக்கக் கூடாது. டாலரில்தான் தயாரிக்கணும்னு உலக வங்கி சொல்லியிருக்காம்!''

– மாலதி ரகோத்தம்





☛ விஜயலட்சுமி, வித்யா : ''ஃபன்டாஸ்டிக்!''

# சுயதொழில் தொடங்குங்கள்; சொந்தக்காலில் நில்லுங்கள்!

மேசையின் மேல் ஒரு பழைய செய்தித்தாளை இரண்டாக மடித்து வைத்து, அதன் மீது எல்.பி. ரெக்கார்டு ஒன்றை வையுங்கள். அதன் மேல் வெள்ளை வெளேர் என்று ஒரு சின்ன பொம்மை பஸ், வட்டமடிக்க அடிக்க, பொம்மை வழியாக எஸ்.பி.பி.யும், சித்ராவும் பாடுவதைத் துல்லிய மாகக் கேட்கலாம். கிராமபோன் பெட்டி வேண்டாம். ஸ்பீக்கர்கள் வேண்டாம்!

இதைப் பார்த்த கிண்டி பொறியியல் கல்லூரி கம்ப்யூட்டர் சயின்ஸ் மாணவிகள் விஜயலட்சுமியும், வித்யாவும் சொல்லும் பதில் : ''ரொம்ப ஒரிஜினலான ஐடியா இது. ஃபன்டாஸ்டிக்... மிகவும் புதுமை யானது.. பார்த்த உடனே இன்டரஸ்டிங் காக இருக் கிறது. உண்மையாகவே பொறியியல் மாணவர்கள் கவனம் செலுத்தினால் இங்கேயே தயாரிக்க முடியும்!''

கனடா நாட்டில் வசிக்கும் சென்னை வாசி சாஸ்திரி, இது மாதிரி இரண்டாயிரம் பொருள்கள் தயாரிக்கத் தேவையான வரை படங்கள், விவரங்கள் அடங்கிய சார்ட்டு களைக் கொண்டு வந்திருக்கிறார். அனைத் தும் இந்திய இளைஞர்களுக்காக!

''எத்தனை நாளைக்குத்தான் பெரிய நிறுவனங்களுக்கான உதிரி பாகங்களையே தயாரித்துக் கொண்டு, கால காலத்துக்கும் ஒரு சார்பு நிறுவனமாகவே இருக்க வேணும்? தைவான், கொரியா போல, அன்றாட உபயோகத்துக்கு ஏற்ற, சிறு சிறு சாமான்களையாவது நாம் முழுமையாகச் செய்ய முடியாதா என்ன?'' என்று கேட் கிறார் சாஸ்திரி.

சாஸ்திரி இவற்றைச் சுய தொழில் நோக்கத்தோடு மட்டும் இங்கே கொண்டு வந்து அறிமுகப்படுத்தவில்லை. உலகத் தரத்துக்குப் போட்டியிடக்கூடிய அளவுக்கு இவற்றைத் தயாரித்து, ஏற்றுமதியும்



சாஸ்திரி

செய்யலாம் என்பது தான் இன்றைய இளைஞர்களுக்கு அவர் சுட்டிக்காட்ட விரும்பும் மற்றொரு முக்கிய அம்சம்.

''இவை எல்லாமே சிறு தொழில்கள் வகையைச் சேர்ந்தவை. எனவே, மாநில அரசின், மத்திய அரசின், வங்கிகளின் உதவியோடு எளிதாகவே தொடங்கி விடலாம்'' என்கிறார்.

அரசு ஆட்குறைப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டதையடுத்து, பிரதமர் நரசிம்ம ராவ் பேசும் போது கூட இனி சுய தொழில்கள் விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்தப்படும் என்று சொன்னதைக் குறிப்பிட்டார் சாஸ்திரி.

- அதிகச் செலவில்லாத ஏர் கூலர்.
- குளிர் நாடுகளில் சூடான போர்வை இருப்பது போல, நம்மூருக்குக் குளு குளு என்ற போர்வை.
- தண்ணீர் வடிகட்டும் வாட்டர் ஃபில்ட்டர்.
- சிறிய ஏர்கண்டிஷனர்.
- காரை விட்டு இறங்காமலே டயர்களில் காற்றடிக்கும் அமைப்பு.
- ஐம்பதடி தூரத்துக்குள் யார் எந்த ஆயுதம் வைத்திருந்தாலும் காட்டிக் கொடுத்துவிடும் மெட்டல் டிடெக்டர். ('ஐயோ, ராஜீவ் காலத்தில் செய்யாமல் போனோமே!' என்று அங்கலாய்க்க வேண்டாம். போலீஸ் துறைக்கு ஏற்றது.)
- வெகு சுலபமான சிறிய ஹைட்ராலிக் ஜாக் - காருக்குள்ளேயே வைத்துக் கொள்ள....

இப்படி இரண்டாயிரம் பொருள்கள்!

தில்லியில் வந்து இறங்கிய உடனேயே தொழில் வள அமைச்சர் பி.ஜே. குரியனைச் சந்தித்துப் பேசியிருக்கிறார் சாஸ்திரி. அதிக அக்கறை காட்டியதோடு, தமது செயலரையும் குறிப்பெடுத்துக் கொள்ளச் சொன்னாராம். ப. சிதம்பரமும் இவரது முயற்சிகளைப் பார்த்தாராம்.

சரி, சாஸ்திரியிடம் இருப்பதோ வெறும் வரை படங்கள், தகவல்கள். இதைக் கொண்டு பொருள்களைத் தயாரிக்கும் முயற்சியில் ஈடுபட்டு விட முடியுமா? மாதிரிக்கு இவற்றில் சிலவற்றைப் பார்க்க வேண்டாமா! அதற்கும் எல்லா வசதிகளையும் செய்து தருகிறார் சாஸ்திரி. ''ஆர்வமுள்ளவர்களுக்கு அவற்றைத் தருவித்துத் தருகிறேன்!'' என்கிறார்.

வெளி நாட்டிலுள்ள பல தயாரிப்பாளர்களிடமும், கண்டு பிடிப்பாளர்களிடமும் பல மாதங்கள் பேசிப் பேசி, இந்திய அரசின் நடைமுறைகளுக்கும், இந்தியத் தயாரிப்பாளரான இளைஞர்களுக்கும் ஏற்றபடி விதி முறைகளைச் சாதகமாக உருவாக்கிக் கொண்டு வந்திருக்கிறார்.

கிண்டி பொறியியல் கல்லூரி வளாகத்தில் நடைபெற்ற புதுப் பொருட்கள் உற்பத்திக் கண்காட்சியில் பங்கு கொண்ட சாஸ்திரியை, நூற்றுக் கணக்கான பொறியியல் துறை மாணவர்களும், சிறு தொழிலதிபர்களும் தினசரி சந்தித்து, விளக்கங்கள் கேட்டுப் பதிவும் செய்து கொண்டிருக்கிறார்கள்.

எல்லோருக்கும் பயன் தரும் விளக்க உரை ஒன்று வழங்க, சென்னையில் ஏற்பாடு செய்து வருகிறார் சாஸ்திரி.

- சாருகேசி

படங்கள் : யோகா

---

''மனநிலை சரியில்லாத உறவினர்கள் இருந்தால் ரூ 12,000/- வரிக்கான வருமானத்தில் தள்ளுபடியாமே?''

''உனக்கு யார் இருக்காங்க அப்படி?''

''என் மாமியாரைக் காட்டி அந்தத் தள்ளுபடி கேக்கலாமான்னு யோசிக்கிறேன்!''

- மாலதி ரகோத்தம்






கல்கி



1992
மார்ச் 22
மலர் : 50
இதழ் : 34
பிரஜோத்பத்தி
பங்குனி 9


# தப்பிப் பிழைத்த அரசு!

பி.வி. நரசிம்மராவ் அரசு தப்பிப் பிழைத்து விட்டது. குடியரசுத் தலைவருக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீதான வாக்கெடுப்பின் போது, 'ஆட்சி கவிழ்ந்து விடுமோ?' என்ற கவலை தேசத்தைப் பற்றியிருந்தது உண்மை. அந்தக் கவலை நீங்கி, நாடு இப்போது நிம்மதிப் பெருமூச்சு விட்டிருக்கிறது.

இந்த வெற்றி தமது கொள்கைகளுக்குப் பெரும்பான்மை இந்திய மக்களின் ஆதரவைப் பிரதிபலிப்பதாய் பிரதமர் அறிவித்ததை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியாது என்றாலும், பொதுவாக நோக்குமிடத்து, ராவ் அரசு வெற்றி பெற்றதில், சராசரி இந்தியன் மகிழவே செய்வான். இதற்கு முக்கிய காரணம், அவன் இவ்வளவு சீக்கிரம் இன்னும் ஒரு தேர்தல் வருவதையோ, வரிப்பணம் வீண் செலவு ஆவதையோ விரும்பவில்லை என்பதே. தேர்தலும் அதனையொட்டிய ஆர்ப்பாட்டங்களும் அடிக்கடி வந்தால், அந்தக் கூச்சல் குழப்பங்களையும் அவை உருவாக்கும் டென்ஷனையும் தாங்க முடியாமல் இந்தியர்கள் மன நோயாளிகளாகவே மாறி விட வாய்ப்புண்டு!

எதிர்க் கட்சியினரும் தேர்தலுக்குத் தயாராக இல்லை. பணம் சேர்த்துக் கொண்டல்லவோ தேர்தலைச் சந்திக்க வேண்டும்! இது தெரிந்துதானோ என்னவோ, "வாக்கெடுப்பில் தோல்வியுற்றால் நாடாளுமன்றத்தைக் கலைத்து விட்டுத் தேர்தலை நடத்தவே சிபாரிசு செய்வேன்" என்று வாக்கெடுப்புக்குச் சில தினங்கள் முன்னதாகவே ஒரு போடு போட்டார் பிரதமர்.

இது ஏற்படுத்திய கலக்கத்தில் எதிர்க் கட்சியினரில் பலர், 'ராவ் அரசு கவிழ்ந்து விடக் கூடாதே' என்ற கவலையில் நாடாளுமன்றத்துக்கு வராமலே இருந்து விட்டனர்! வந்து வாக்களித்தால்தானே வம்பு! ஆளும் கட்சிக் குள்ளேயும் உட்பூசல்கள் நிறையவே புகைந்தாலும், இப்போதைக்கு அவசரப்படாமல் - கவிழ்க்க முயற்சி செய்யாமல் - ஆதரவு வோட்டுக்களே அளித்துள்ளனர். படாதபாடு பட்டு காங்கிரஸ் கொறடா, காங்கிரஸ் எம்.பிக்களைத் தேசத்தின் நாலா திசைகளிலிருந்தும் பறந்து வரச் செய்து நிலைமையைச் சமாளித்திருக்கிறார்.

எதிர்க் கட்சிகளிடையே ஒத்துழைப்பு இன்மையையும் எதிர்க் கட்சிகளுக்குள்ளே ஒற்றுமையின்மையையும் இந்த வாக்கெடுப்பு நன்றாக எடுத்துக் காட்டியது. ஜனதா தளம் பிளவு பட்டுப் போயிருக்கிறது. தெலுங்கு தேசமும் உடைகிற சூழ்நிலை உருவாகிவிட்டது. கட்சி மேலிடக் கட்டளையை மீறி, பிரதமருக்கு ஆதரவாக நடந்து கொண்ட தெலுங்கு தேச எம்.பிக்கள் பலர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு நேர்மாறாக, தோழமைக் கட்சியான அ.இ.அ.தி.மு.க.வின் பூரணமான ஆதரவுக்கு முழுமையான நன்றி செலுத்தி விட்டார் பிரதமர்.

குறிப்பிட்ட சில கொள்கைகள், பட்ஜெட்டின் சில பல அம்சங்கள் ஆகியவற்றில் மக்கள் பலருக்குக் கருத்து மாறுபாடு இருப்பினும், பொதுவாக நரசிம்மராவின் அடக்கமும் எளிமையும் நேர்மையும் சராசரி இந்தியனைக் கவர்ந்துள்ளது நிச்சயம். அவர் பதவியில் நீடித்து, புதிய தொழில், பொருளாதாரக் கொள்கைகள் வெற்றி பெறப் பாடுபட வேண்டும் என்றே அவன் விரும்புகிறான்.

ஆனால் ஒன்று. ராவ் அரசு, வாக்கெடுப்பில் கலந்து கொண்ட 477 எம்.பிக்களில் (5 பேர் அம்பேல் ஆகிவிட) 262 பேர்களின் ஆதரவைப் பெற்றாலும், மொத்தமுள்ள 532 மக்களவை உறுப்பினர்களில் பாதிப்பேருடைய ஆதரவுக்கும் குறைவாகவே பெற்றுள்ளது என்பது கவனிக்கத்தக்கது. எனவே, பிரதமர் இது போன்ற இன்னும் பல சோதனைகளையும் அவ்வப்போது சந்திக்க நேரும் என்பது உறுதி. அவற்றிலும் மனம் தளராமல் தேறி, நல்லாட்சி வழங்க வாழ்த்துகிறான் இந்தியக் குடிமகன்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



"என் மனைவி-
நிதி
மந்திரியும்
கூட!"

# ஸ்ரீராமின் வேலைக்கு உதவிய ஸ்ரீராம்

**மா**தத்தின் முதல் வாரத்தில் எங்கள் வீட்டின் பட்ஜெட் கூட்டம் நடைபெறும். மனைவிதான் செலவுத் திட்டங்களைப் போடுவாள். வீட்டுச் செலவுகள் பற்றிய பட்டியலையெல்லாம் முடித்து விட்டுக் கடைசியாக, "மகன் ஸ்ரீராமுக்கு 900 ரூபாய்" என்பாள்.

வெளியூரில் ஹாஸ்டலில் தங்கிப் பட்டப் படிப்புப் படிக்கும் அவன் செலவுக்கு ஒதுக்கப்படும் தொகைதான் அது. ஒவ்வொரு மாதமும் இந்தத் தொகையை அவனுக்கென்று ஒதுக்கும் போதெல்லாம், "இது மிகவும் அதிகம்" என்பேன். "650 போதுமே? மீதி எதுக்கு?" என்று கோபப்படுவேன். அவள் அமைதியாகப் பதில் சொல்வாள்: "இப்போது அனுப்பினால் பின்னால் பலன் கிடைக்கும்."

வருடங்கள் ஓடின. அவன் படிப்பு முடிந்து, ஒரு நல்ல நிறுவனத்தில் வேலையும் கிடைத்தது. வேலை உத்தரவில் 'ரூபாய் 5000 டெபாசிட் செலுத்த வேண்டும்' என்று குறிப்பிட்டிருந்ததைக் கண்டபோது சற்று அதிர்ச்சியாக இருந்தது.

நல்ல நிறுவனம். நல்ல வேலை. விட்டு விட்டால் இதுபோல இன்னொன்று கிடைப்பது அரிது. அப்படியே கிடைக்கும் என்றாலும் எப்போது கிடைக்குமோ? எனவே அதை விடுவதற்கு விருப்பம் இல்லை. என்றாலும், ரூ.5000/-என்னும்போது மலைப்பாக இருந்தது.

என் குழப்பத்தை மனைவியிடம் கூறியபோது, "பின்னால் பலன் கிடைக்கும் என்றேனே, நினைவிருக்கிறதா?" என்றாள்.

மௌனமாக அவளை ஏறிட்டேன். அதன் விவரத்தை எடுத்துச் சொன்னாள்.

அவள் செய்தது எல்லாம் இதுதான்: மகன் ஸ்ரீராமுக்கு அவள் மாதா மாதம் அனுப்பியது என்னவோ 700 ரூபாய்தான். மீதித் தொகையை அவள் ஸ்ரீராம் சீட்டில் கட்டி வந்திருக்கிறாள். அது தவணை முடிந்து இப்போது மொத்தமாக வந்திருக்கிறது. ஆகவே டெபாசிட் தொகை 5000 ரூபாய் கட்டுவது பிரச்னையே இல்லை. இதைத்தான் அவள் மறைமுகமாகப் பின்னால் பலன் கிடைக்கும் என்று கூறியிருக்கிறாள்!

ஆக, ஸ்ரீராமுக்கு வேலை கிடைக்க ஸ்ரீராம்தான் உதவியது. எல்லாம் என் மனைவியின் முன்யோசனை.

— என். கிருஷ்ணமூர்த்தி,
நாமக்கல் - 637 001.



# பெரிய கவுண்டர் பொண்ணு

கதை என்னவோ ரொம்பவும் சாதாரணம்.

செல்வச் செழிப்பில் மிதந்து கொண்டிருந்த காலத்தில் தன் ஏழைச் சகோதரனிடம், அவன் மகளைத் தன் மகனுக்கு மணம் செய்து கொள்வதாய் வாக்களிக்கிறார் மனோரமா. காலத்தின் சுழற்சியில், மனோரமா வாழ்க்கையின் அடித்தளத்துக்குப் போய் விட, சகோதரன் ஜெய்கணேஷ் உச்சத்தில். மாறி விட்ட சூழ்நிலையில் ஜெய்கணேஷ் அந்த வாக் குறுதியைத் துடைத்து அப்பால் போட்டு விட, மனோரமா மட்டும், பாவம், அதனை நிறைவேற்ற வேண்டும் என்று துடியாய்த் துடிக்கிறார். கல்வி யறிவு இல்லாத சரத்குமாருக்கும் (மனோரமாவின் மகன்) கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றுள்ள கௌதமிக்கும் (ஜெய்கணேஷின் மகள்) கல்யாணம் எப்படி நடக்கிறது என்பது திரைக்கதை.

தொடக்கத்தில் குழப்பங்கள் இருந்தாலும் போகப் போக விறுவிறுப்புக் கூடுகிறது. ஒரு சாதா ரணக் கதையை உட்கார்ந்து பார்க்கும்படி செய்வது இயக்குனர் மணிவாசகத்தின் கைவண்ணம்.

கல்விச் செருக்குடன் கம்பீர நடை பயிலும் கௌதமி -

தொட்டதுக்கெல்லாம் சிலிர்த்து எழுந்து அடிதடி யில் இறங்கும் சரத்குமார் -

தன்னுடைய சமூக அந்தஸ்து ஒன்றையே முன் நிறுத்தி ஒவ்வொன்றையும் அணுகும் புதுப் பணக் காரர் ஜெய்கணேஷ் -



காலம் மாறியும் பழமையை மறக்காத வடிவுக்கரசி -

இப்படிப் பலரும் பாத்திரமுணர்ந்து செயல்பட்டிருந்தாலும் - பளிச்சென்று முன்னே நிற்பவர் மனோரமாதான்.

மூக்கத் திணறுமளவுக்குக் கிராமிய மணம்.

- சி. ஆர். கே.

# காதலெனும் வானவில்

வாஸந்தி

"டெவி பதின்னு சொல்வாங்க இல்லே?" என்று மீரா சந்தோஷமாகச் சிரித்தாள். "பஸ்ஸிலே வரும்போது உன்னைப் பத்தித்தான் நினைச்சிட்டு வந்தேன் ஹரி. பரீட்சை முடிஞ்சு போச்சா?"

"முடிஞ்சு ரெண்டு நாள் ஆச்சு" என்றான் அவன் புன்னகையுடன். "உனக்கு இன்னிக்கு முடியும்னு தெரியும், அதான் கிளம்பி வந்தேன்."

"இந்த ஸ்டாப்பிலே இறங்கணும்னு உனக்கு எப்படித் தெரிஞ்சுது?" என்றாள் அவள் வியப்புடன்.

"வாய் இருக்கே." - சிரித்தான்.

"நீ வந்தது எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமோ?"

அவன் அவள் பக்கமாகத் திரும்பி, மெல்லிய புன்னகையுடன் சொன்னான் : "உன் குரல்லேந்து எனக்கு அது புரியுது. நீ ரொம்ப அழகானவ மீரா!"

அவள் கூச்சத்துடன் சிரித்தாள். "எப்படிச் சொல்றே?" என்றாள்.

"அழகுங்கறது பார்க்கறவன் கண்ணுலே இருக்குன்னு சொல்வாங்க. எனக்கு மனசாலேதான் கணிக்க முடியும். உன் நாட்டியத்தைக் கற்பனை பண்ற மாதிரி உன்னைக் கற்பனை பண்ண முடியும்."

"சுட்! அப்ப நா நிஜத்திலே இருக்கறதை விட உன் கற்பனையிலே ரொம்ப அழகாயிருப்பேன்!"

அவன் சட்டென்று நின்று அவளுடைய கையைத் தனது இன்னொரு கையால் அழுத்தினான்.

"அது வெறும் கற்பனையில்லே. அதுதான் நிஜம். பாசாங்குத்தனமில்லாத மனசு உனக்கு. குருடனுக்கு வேறு எதுவும் அழகா இருக்க முடியாது மீரா!"

எதையோ நிரூபிக்க விரும்புபவன் போல் அவன் வேகத்துடன் பேசினான். அன்று சங்கர் அவள் கன்னத்தைத் தொட்டு 'நீ ரொம்ப நல்லா இருக்கே' என்று சொன்னது திடீரென்று ஞாபகம் வந்து, மீண்டும் அவமானப்படுத்திற்று.

"குருடன் கிருடன்னு சொல்லாதே. நல்ல சிநேகிதமெல்லாம் மனசைத்தான் பார்க்கும். உருவத்தைப் பார்க்காது, கண் இருந்தாலும்" என்றாள் அவள் மெல்ல. "உனக்குக் கண் இல்லேங்கறதே எனக்கு நினைவு இருக்கிறதில்லே. நீ ஏன் திரும்பத் திரும்ப ஞாபகப்படுத்தறே?"

அவன் ஏதோ யோசனையில் ஆழ்ந்து மெல்லச் சொன்னான். "உனக்கு ஞாபகம் இருக்கணும் மீரா. எனக்கு நீ ஞாபகப் படுத்தக் கூடாதே தவிர, உனக்கு இருக்கணும்."

இதற்கு என்ன அர்த்தம் என்று கேட்க நிமிர்ந்தபோது, வீடு வந்து விட்டதை உணர்ந்தாள்.

காம்பவுண்டுக்குள் ஒரு கார் நின்றிருந்தது. பின் கண்ணாடியில் இருந்த சிவப்புக் குறியிலிருந்து டாக்டரின் வண்டி என்று தெரிந்தது. மஹேஷ் வராந்தாவில் இருந்த பிரம்பு நாற்காலியில் அமர்ந்திருந் தான். அவர்களைக் கண்டதும், ஹரியை ஒரு பார்வை பார்த்து, வழக்கம் போல் 'ஹாய்' என்று சிநேகிதமாகச் சொல்லாமல் அவளிடம், "மீரா, அப்பாவுக்கு உடம்பு சரியாயில்லே. டாக்டர் வந்திருக்கார்" என்றான்.

அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"உடம்பு சரியில்லையா? கார்த்தாலே என்னை ட்ராப் பண்ணாரே ஸ்கூல்லே? ஜுரமா?"

டாக்டர் வரும்படி திடீரென்று என்ன வந்தது என்று அவளுக்குத் திகைப்பாக இருந்தது.

"எனக்குத் தெரியாது" என்றான் மஹேஷ் மெல்லிய கலவரத்துடன். "நீ போய்க் கேளு."

ஹரி அவளுடைய கையைத் தொட்டு, "நா இன்னொரு நாளைக்கு வரேன் மீரா. நீ போய் உங்கப்பாவைக் கவனி" என்றான்.

"பரவாயில்லே நீ வா. கொஞ்ச நேரம் இருந்துட்டுப் போகலாம். அப்பாவுக்கு லேசா ஜுரம்னாலும் அம்மா பயந்து டாக்டரைக் கூப்பிடுவாங்க. காலையிலே அப்பாவுக்கு ஒண்ணுமே இருக்கல்லே."

ஹரியின் கையைப் பிடித்து அவள் அழைத்து வருவதைக் கவனித்த மஹேஷ் 'அவனுக்குக் கண் தெரியாதா?' என்று அவள் காதருகில் கிசுகிசுத்தான். 'தெரியாது' என்று பொருள்படும்படி அவள் தலையாட்டினாள். மஹேஷ் சட்டென்று நகர்ந்து ஹரியின் இன்னொரு கையைப் பிடித்து சோபாவில் அமர்த்தியது அவளுக்குச் சந்தோஷத்தை அளித்தது.

"இங்கே வேண்டாம் மஹேஷ். என்னுடைய ரூமுக்கு அழைச்சிண்டு போ. ப்ளீஸ்" என்றாள். "இந்தா என் பையையும் என் மேஜைமேல வெச்சிடு. நா

அப்பாவைப் பார்த்துட்டு வரேன்'' என்று அவனிடம் தன் பையைக் கொடுத்தாள்.

ஹரியின் முகத்தில் தெரிந்த சங்கடத்தைக் கண்டு அவன் தோளைத் தட்டி ''ரிலாக்ஸ் ஹரி, நான் இப்ப வந்துடுவேன்'' என்றாள். ''பாட்டு ஏதாவது போடு மஹேஷ்!'' மாடிப் படியில் அவர்கள் ஏறுவதைக் கவனித்து, அவள் கீழே இருந்த பெரிய பெட்ரூமுக்கு விரைந்தாள்.

டாக்டர் குனிந்து அப்பாவைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார். அப்பாவின் முகம் தெரிவதற்கு முன் அம்மாவைக் கண்டு 'திக்'கென்றது. காலையிலிருந்து மாலைப் போதுக்குள் பத்து வயது கூடியிருந்தது. பீதியின் எல்லையில் தன்னை மிகவும் சிரமப்பட்டு நிதானப்படுத்திக் கொள்பவள் போல் தெரிந்த அவளருகில் விரைந்து மீரா அவள் தோளைத் தொட்டு ''என்னம்மா?'' என்றாள்.

அம்மாவின் கண்களில் 'குபுக்'கென்று நீர் நிறைந்தது. உதட்டைப் பிதுக்கி கையை விரித்தாள்.

''ரிலாக்ஸ்மா'' என்றாள் மீரா மெல்லிய குரலில். ''அதான் டாக்டர் வந்திருக்காரே. ஒண்ணுமிருக்காது'' என்று கிசுகிசுத்தாள். கண்ணை மூடிய நிலையில் படுத்திருந்த அப்பாவைப் பார்த்து, மனசு அதிர்ந்து போயிற்று. காலையில் ஸ்கூலில் இறக்கிவிடும்போது அவள் கையைக் குலுக்கி 'பெஸ்ட் ஆஃப் லக்' சொன்னவரா இவர் என்று பதைக்கையில் நல்லவேளையாக அப்பா கண்களைத் திறந்தார். ஜீவனெல்லாம் வற்றிப்போன பார்வையுடன் கண்களைச் சுழற்றிப் பார்த்தார். மீராவிடம் சற்றுத் தயங்கி பிறகு அம்மாவைப் பார்த்து, ''ஐ வில் பி ஆல் ரைட் சுஜாதா; தைரியமாயிரு'' என்றார் மிகமெல்ல.

அம்மா கண்களைத் துடைத்துக் கொண்டு, சிரிக்க முயன்றாள். மீராவுக்கு அப்பாவைப் பார்க்க இனம் புரியாமல் கலவரம் ஏற்பட்டது. அவருடைய கையைப் பிடித்து, ''டாட், என்ன ஆச்சு உங்களுக்கு?'' என்றாள்.

டாக்டர் யாருக்கோ டெலிபோன் செய்து கொண்டிருந்தார்.

அப்பா லேசாகப் புன்னகை செய்து, ''ஒண்ணுமில்லே. ஐ ஆம் ஆல் ரைட்'' என்ற போது, அவரே அதை நம்பவில்லை என்கிற பயம் அவளுக்கு ஏற்பட்டது.

டாக்டர் பரபரப்புடன் வந்து, ''ஆஸ்பத்திரிக்குத் தகவல் கொடுத்தாச்சு, கிளம்பலாம் மிஸஸ் ஸ்ரீனிவாசன்'' என்றார்.

மீரா திடுக்கிட்டு எல்லாரையும் மாறி மாறிப் பார்த்தாள். அம்மா என்ன செய்வதென்று புரியாதவள் போல் குழப்பத்துடன் தடுமாறுவதை உணர முடிந்தது. பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''ஆஸ்பத்திரியிலே தங்க வேண்டியிருக்குமா டாக்டர்?'' என்றாள் அம்மா.

''அதைப் பத்தி அப்புறம் யோசிக்கலாம், நீங்க இப்பக் கிளம்புங்க'' என்று துரிதப்படுத்தியதிலிருந்து நேரத்தைக் கடத்தக் கூடாது என்று அவர் அவசரப்படுவது புரிந்தது.



அடிவயிற்றில் மீராவுக்குக் 'கப்'பென்று பயம் கவ்விற்று. அம்மா அவசரமாகச் சாமி படத்துக்கு முன் விளக்கேற்றி, கண்மூடிப் பிரார்த்தித்து, விபூதிச் சம்புடத்தை எடுத்துக் கொண்டு அப்பாவிடம் விரையும்போது, மாடியிலிருந்து மெடோனாவின் பாட்டுக் கேட்டது. அம்மா திகிலடைந்தவள் போல அவளைப் பார்த்து, ''யாரு டேப் போடறது?'' என்றாள். அந்தத் தருணத்தில் பாட்டுச் சத்தம் வருவது அபத்தமானது என்ற உணர்வுடன், ''ஹரி வந்திருக்கான்'', என்றாள்.

"அப்பா வுக்கு உடம்பு சரியில் லேன்னு எனக்குத் தெரியாது. மஹேஷைப் போடச் சொன் னேன்."

"ஹரியா? இன்னிக்குன்னு அவனை வேறு கூட்டிண்டு வந்தியா?"

அம்மா பேசிக் கொண்டே அப்பா இருந்த அறைக்குச் சென்றாள். அப்பாவின் நெற்றியில் விபூதி இடும்போது அம்மா வின் விரல்கள் நடுங்கின. "நா அழைச் சிண்டு வரல்லே. அவனா வந்தான்" என் றாள் மெல்லிய குரலில். அது காதில் விழுந்ததாக அம்மா காண்பித்துக் கொள்ள வில்லை. மீரா அப்பா எழுந்திருக்க உதவி னாள். டாக்டரும் அம்மாவுமாக அப்பா வைக் காருக்கு நடத்துகையில், காரின் கதவைத் திறந்து வைத்து நின்றாள்.

"நானும் வரேன்மா ஆஸ்பத்திரிக்கு" என்றாள்.

அம்மா ஒரு விநாடி தயங்கினாள், 'வா' என்று சொல்ல விரும்பியவள் போல. டாக்டர் ஏகப் பரபரப்பில் இருந்தார்.

"எல்லாரும் வரவேண்டிய அவசிய மில்லே. அம்மா வந்தாப் போதும்," என்று வண்டியைக் கிளப்பும் போது, மீராவுக்குப் பயமும் துக்கமும் அடிவயிற்றிலிருந்து அலை அலையாக எழுந்து, நெஞ்சை அடைத்தது. காரின் ஜன்னல் வழியாகக் குனிந்து, அப்பாவின் கையைத் தொட்டு, "ஆல்தி பெஸ்ட் டாட்" என்ற போது, கண் ணில் நீர் நிறைந்தது. பதில் சொல்லக் கூடத் திராணியில்லாமல் அப்பா தலையசைத் தார்.

**கா**ர் கிளம்பிச் சென்றதும் திடீரென்று ஒரு பலவீனம் அவளை ஆட்கொண்டது. காலையில் நன்றாயிருந்த அப்பாவுக்குத் திடீரென்று இப்படி எப்படி மோசமாகிப் போகும் என்று புரியவில்லை. ஹார்ட் அட்டாக்காக இருக்கும் என்று தோற்றிற்று. பிழைப்பாரா என்று திகில் ஏற்பட்டது.

வாயிற் கதவைச் சாத்தி, அம்மா அப்பா வின் படுக்கையறையை ஒட்டியி ருந்த குளியலறைக்குச் சென்று முகம் கழுவிக் கொண்டாள். அப்பாவின் ஆஃப்டர் ஷேவ் லோஷ னைப் பார்த்துக் கண்கள் கலங்கின. 'அசடு, அசடு, அப்பா வந்துவிடுவார்' என்று சமா தானப்படுத்திக் கொண்டாள். முகத்தை அழுத்தித் துடைத் துக் கொள்கையில் 'நல்ல வேளை, ஹரி யாலே என்னைப் பார்க்க முடியாது' என்று நிம்மதியேற்பட்டது.

சமையலறைக்குச் சென்று பாலைச் சுட வைத்து மூன்று போர்ன்விடா கலந்து, டிரேயில் வைத்து மேலே எடுத்துக் கொண்டு போனதும் தீவிர யோசனை யுடன் அமர்ந்திருப்பவனைப் போலத் தெரிந்த ஹரி நிமிர்ந்து, "உன் அப்பாவுக்கு என்ன மீரா?" என்றான்.

ஏதோ புத்தகத்தில் ஆழ்ந்திருந்த மஹேஷ் திரும்பி, "மீரா வந்தது எப்படித்

தெரிஞ்சது?'' என்றான்.

ஹரி புன்னகையுடன், ''எனக்கு ஞானக்கண் இருக்கு, மீராவைக் கேளு சொல்லுவா'', என்றான்.

''அப்படின்னா?'' என்ற மஹேஷுக்குப் பதில் சொல்லத் தெம்பில்லாமல், ''அதை அப்புறம் சொல்றேன். இந்தா போர்ன்விடா எடுத்துக்கோ,'' என்று அவனிடம் நீட்டி, ஒரு கிளாஸை ''ஹரி எடுத்துக்கோ'', என்று அவன் கையைப் பிடித்துக் கொடுத்தாள். அதை வாங்கிக் கொண்டு, ''உங்க அப்பாவுக்கு எப்படி இருக்கு?'' என்றான்.

''அப்பாவை ஆஸ்பத்திரிக்கு அழைச்சிட்டுப் போயிருக்காங்க'' என்றாள் அவள் மெல்லிய குரலில்.

''ஆஸ்பத்திரிக்கா? ஏன்?''

''தெரியல்லே ஹரி. யாரும் ஒண்ணும் சொல்லல்லே சரியா. ஆஸ்பத்திரிக்கு எனக் கும் போகணும்னு இருந்தது -''

''என்னாலே நின்னுட்டியா?''

''இல்லே இல்லே. டாக்டர் வேண்டாம்னு தடுத்திட்டார். மஹேஷ் வேற வீட்டிலே தனியா இருப்பான். மஹேஷ், அப்பாவுக்கு என்ன ஆச்சு தெரியுமா?''

''தெரியாது'' என்ற மஹேஷின் வட்ட விழிகளில் நீர் நிறைந்திருந்தது. ''நான் விளையாடிட்டு வீட்டுக்கு வந்தபோது டாக் டர் வந்திருந்தார்.''

அவள் மஹேஷுக்கு அருகில் சென்று அமர்ந்து, அவனை அணைத்துக் கொண்டாள். பேசுவதற்கு எதுவுமே இல்லாமற் போனது போல் மூவரும் மௌனமாக போர்ன்விடாவைக் குடித்தார்கள். அவள் எழுந்து, சோர்வுடன் பாட்டை நிறுத்தினாள்.

''உங்க அப்பா நல்லா ஆயிடுவாங்க மீரா, கவலைப்படாதே'' என்றான் ஹரி.

அவள் பதில் சொல்ல முடியாமல் அமர்ந்திருந்தாள். மஹேஷ் அருகில் இல்லாவிட்டால் இவனிடம் ஒரு குரல் அழுதிருக்கலாம் என்று தோன்றிற்று. இவன் புரிந்து கொள்வான்.

இந்த ஊர் டாக்டர்கள் எப்படியோ? ஆஸ்பத்திரி நன்றாக இருக்குமோ? என்று அவளுக்குக் கவலையேற்பட்டது. மஹேஷுக்கு எதிரில் இந்தக் கேள்வி கேட்டால் அவன் கலவரப்பட்டுப் போவான் என்று பேசாமல் இருந்தாள்.

''நம்பிக்கை வை மீரா'' என்று ஹரி சொன்னான் - ஏதோ அசரீரி வாக்கு போல.

''நம்பிக்கையைப் போல நமக்கு பலம் தர்றது எதுவுமே இல்லே.''

அவளுக்கு இன்னும் பலவீனப்பட்டு அழுகை வெடித்தது. ஹரி சட்டென்று நகர்ந்து அவளுடைய தோளைப் பற்றினான்.

''அழாதே மீரா. நீ அழுதா எனக்குத் தாங்காது'' என்றான்.

(தொடரும்)

# ஜோடிப்

"உஸ், எழுந்திருங்க. அத்தையும், மாமாவும் பூஜைக்கு ரெடி ஆயிட்டாங்க. குழந்தைகள் கூட புதுசு உடுத்திக்கிட்டுக் காத்திருக்காங்க. வருஷப் பொறப்பன்னைக்கு இப்படி எட்டு மணி வரைக்கும் தூங்கறீங்களே'' என்று உலுக்கினாள் லக்ஷ்மி.

''எப்பவோ ஒருநாள் லீவு வருது. கொஞ்சம் தூங்கலான்னா விடமாட்டியே. வருஷா வருஷம் கொண்டாடறதுதானே. என்னை விட்டுட்டு நீங்க மட்டும் கொண்டாடுங்க. நான் கொஞ்சநேரம் தூங்கறேன்,'' என்றான் மனோகர் தலையணையைக் கட்டிக் கொண்டு.

''வருஷப் பிறப்பன்னைக்கு அந்த மாதிரியெல்லாம் பேசாதீங்க. சட்டுனு கண்ணைத் தொறக்காம, என் கையைப் பிடிச்சுக்கிட்டு எந்திரிச்சு பூஜை ரூம் வரைக்கும் வாங்க. மொதல்மொதல்லே கண்ணிலே படற பொருளோட பாதிப்புதான் வருஷம் பூராவும் இருக்குமாம்,'' என்று அவன் கண்களைப் பொத்தியவாறு அழைத்துச் சென்று, பூஜையறையில் நிறுத்தி, கண்களைத் திறக்கச் சொன்னாள். பெரிய கண்ணாடிமுன் பலவிதமான பொருட்கள் படைக்கப்பட்டிருந்தன. ஜ க ஜ க வெ ன ஜொலிக்கும் தங்க நகைகளும், காசுகளும் நோட்டுகளும் ஒரு தட்டில். தாம்பாளத்தில் எல்லோருடைய புதுத் துணிகள். இன்னொரு தட்டில் இனிப்பும், பழங்களும். 'ஹா' என்று மயங்குவது போல நடித்த மனோகர், ''இதெல்லாம் மொதல்லே பார்த்தா என்ன, உன்னோட மொகத்திலே முழிச்சா என்ன, ரெண்டுமே லக்ஷ்மி தானே' என்று சொல்லவும், குப்பென்று முகம் சிவந்தது லக்ஷ்மிக்கு. ''போங்க... சட்னு பல்தேய்ச்சுட்டு, குளிச்சுட்டு வாங்க!'' என்று பொய்யாய்க் கணவனை விரட்டினாள்.

லக்ஷ்மிக்கு அதிசயமாக இருந்தது. அழகான, அருமையான கணவன், மணி மணியாய் இரண்டு குழந்தைகள், பெற்றோருக்கும் மேலாய்ப் பாசத்தைச் சொரியும் அத்தையும் மாமாவும். நினைக்க நினைக்க நெஞ்சு பூரித்தது அவளுக்கு. நகரின் பெரிய ஜவுளிக்கடையான லக்ஷ்மி டெக்ஸ்டைல்ஸ், உரிமையாளரின் ஒரே பெண்தான் லக்ஷ்மி. பெற்றோரும் சரி, அவள் அண்ணன் பிரகாசமும் சரி அவள் மேல் உயிரையே வைத்திருந்தனர்.

செல்வச் செழிப்பு, இனிமையாய்ப் பழகும் குணம் எல்லாம் இருந்தும், பெரிய குறை ஒன்றிருந்தது லக்ஷ்மியிடம், அ தா வ து அவளுடைய நிறம். 'கரி' நிறம் என்றோ 'காக்கை' நிறம் என்றோ விளையாட்டுக்குச் சொல்வார்கள் அல்லவா, அப்படியொரு கறுப்பு நிறம் அவளுக்கு. மற்றபடி பார்க்க லட்சணமாய், களையாய் இருந்தாள். என்னதான் பணத்தை இட்டு ஈடு கட்ட முயன்றாலும் இந்தக் காலத்து வாலிபர்கள் தாங்கள் அழகாக இல்லாவிட்டாலும், தங்களுக்கு வரும் மனைவி அழகாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்களே. இந்த மாதிரி நான்கு சம்பந்தம் தட்டிப் போயிற்று. பயந்து போன லக்ஷ்மியின் பெற்றோர், தீவிரமாய்த் தேடத் தொடங்கிய போது கிடைத்தவன்தான் மனோகர்.

மனோகர் லக்ஷ்மிக்கு நேர் எதிர். 'எலுமிச்சை நிறம்' என்று பெண்களுக்கு உவமையாகச் சொல்லும் இளம் மஞ்சள் நிறம் அவனின் தனிச்சொத்து. ஆறடி உயரமும், அளவான பருமனும், யாரையும் திரும்பிப் பார்க்க வைக்கும்.

மனோகர் குடும்பம் வந்து லக்ஷ்மியைப் பெண் பார்த்த போது யாருக்குமே நம்பிக்கையில்லை. மனோகருக்கு லக்ஷ்மியைப் பார்த்ததுமே ஷாக்காக இருந்தது. பெண் பார்க்கும் படலம் முடிந்ததும், யாருக்கும் என்ன பேசுவதென்றே புரியவில்லை. வீட்டுக்கு வந்து கலந்து ஆலோசிக்கலாம் என்று அம்மாவிடம் மெல்லிய குரலில் கூறிவிட்டான் மனோகர்.

வீட்டுக்கு வந்ததும், முகம் சிவந்தான். அப்பா



# பொருத்தம்

மெல்லிய குரலில் ஆரம்பித்தார். ''பாரு மனோகர்.... தரகன் சொன்னான், பொண்ணு கொஞ்சம் கறுப்புன்னு. ஆனா கொஞ்சம் கறுப்பில்லை. அட்டக்கரி. அதுவும் உன்னோட ஒப்பிட்டா இந்த வித்தியாசம் தூக்கலாத் தெரியும். இது மைனஸ் பாயின்ட். சரி, பிளஸ் பாயின்ட் என்னென்னன்னு பார்ப்போம். மொதலாவது பொண்ணு, ரொம்பவும் அடக்கம். படிப்பும் இருக்கு. மேலும், உன்னோட சம்பளத்தை மட்டுமே நம்பிக்கிட்டு நான், உங்க அம்மா, ரெண்டு பொண்ணுக எல்லாரும் இருக்கோம். வரதட்சணைன்னு இல்லாமே நம்ம ரெண்டு பொண்ணுக பேர்லேயும் லட்ச ரூபாய் போடறதா பொண்ணோட அப்பா சொல்லியிருக்கார்,'' என்றதுமே ஆவேசம் கிளம்பியது மனோகருக்கு.

''ரெண்டு லட்ச ரூபாய்க்காக அந்தக் காக்கா கழுத்துலே தாலி கட்ட முடியாது'' என்றான் வெறுப்புடன்.

அம்மாவுக்கு ஆவேசம் வந்துவிட்டது, ''நிறுத்துடா. ஏதோ நீ கொஞ்சம் பாக்கற மாதிரி இருக்கேன்னா, மத்தவங்களை மட்டந் தட்டிப் பேசறதா? பொண்ணுடா நானும். இன்னொரு பொண்ணை அவமானம் பண்ணினா சகிக்க மாட்டேன். உன்னோட தங்கச்சிகளை எவனாவது மட்டமாப் பேசினா கேட்டுகிட்டுச் சும்மா விட்டுடுவியா நீ? கறுப்புங்கறது ஒரு கலர், அவ்வளவுதான். அது மட்டம்னு யார் சொன்னா. எல்லாம் பாக்கற பார்வையிலே இருக்கு. பணத்தை வேணா வேண்டாம்னு சொல்லிடு. பொண்ணு தங்கம்டா. அவளை வேண்டாங்காதே'', என்றாள் உணர்ச்சிப் பெருக்குடன்.



குடும்பமே தனித் தனியாய் யோசித்தனர். கூடி விவாதித்தனர். பின், மனோகர் தன் தீர்மானத்தை வெளியிட்டான்.. ''லக்ஷ்மியை நான் முழு மனசோட ஏத்துக்கறேன். வரதட்சணை வேண்டாம்,'' என்றான்.

லக்ஷ்மியின் குடும்பத்தினருக்கு விஷயத்தைக் கேள்விப்பட்டவுடன் மயக்கமே வந்துவிட்டது. என்ன தடுத்தும் கேளாமல், மனோகரின் தங்கைகள் நித்யா, கல்யாணி பேர்களில் ஆளுக்கு லட்சம் ரூபாய் போட்டு விட்டுத்தான் நிச்சயத்திற்குத் தேதியே குறித்தனர். மிகவும் சிறப்பாக நடந்தது கல்யாணம்.

லக்ஷ்மியைத் தங்கள் குடும்பத்தில் ஒருத்தியாக அந்த நிமிடம் முதலே நினைக்கத் தொடங்கி விட்டனர். நித்யாவும், கல்யாணியும் தங்களுக்குத் திருமணமாகிக் கிளம்பும்போது லக்ஷ்மியைப் பிரிய முடியாமல் அழுதனர். பத்து வருடங்களில் அவள் அந்த வீட்டு மருமகள் என்பது மறந்து போய், மகளாகவே நினைக்கத் தொடங்கியிருந்தனர் மனோகரின் அப்பா கணபதியும், அம்மா பூரணியும்.

வருஷப் பிறப்பன்று 'விஷுக்கனி' என்று மலையாளத்தவர்கள் செய்வது போல் செய்யும் பழக்கம் லக்ஷ்மியின் தாய் வீட்டில் இருந்தது. அதே மாதிரி செய்யத் தடையொன்றும் சொல்லவில்லை மனோகர் குடும்பத்தினர். அதனால், அந்தப் பண்டிகை மட்டும் தடபுடலாய் நடக்கிறது இந்தப் பத்து வருடங்களாய்.

''என்னம்மா, நான் குளிச்சுட்டு வர்றதுக்குள்ளே நீங்க கனவுலோகத்துக்குப் போயிட்டீங்களா?'' என்று மனோகர்

சி. எஸ். சித்ரா

இண்டலாகக் கேட்க, வெட்கத்துடன் எழுந்தாள் லக்ஷ்மி. குழந்தைகள் காலையிலேயே புதிது உடுத்திக் கொண்டு விட்டதால், தனக்கும், தன் கணவனுக்குமான துணிகளைத் தாம்பாளத்திலிருந்து எடுத்துக் கொண்டு தங்கள் அறையை நோக்கி நடந்தாள் லக்ஷ்மி. அப்போது கதவு தட்டும் சத்தம் கேட்டது. துணிகளை சோபாவின் மேல் வைத்துவிட்டுக் கதவைத் திறந்தாள்.

ஓர் இளம் பெண், வயது இருபது இருக்கலாம். எல்லாப் பெண்களின் அழகையும் கடன் வாங்கிப் பெற்றவள் போல் பேரழகுடன் நின்றிருந்தாள். அவள் தோளில் ஒரு பேக்கும், கையில் சூட்கேஸூம் கனத்தன.

''பக்கத்து வீட்லே சுசிலாவும், அவங்க அம்மாவும் எங்கே? நான் திருச்சியிலிருந்து வர்றேன். வர்றதா ஒரு வாரம் முன்னாலேயே லெட்டர் போட்டிருந்தேன்...'' என்றாள் அந்தப் பெண் தயக்கத்துடன்.

''அடடா, சுசிலாவோட தாத்தா செத்துப்போனதா டெலகிராம் வந்ததுன்னு அம்மாவும், பொண்ணும் கிளம்பிப்போய் ரண்டு நாளாச்சு'' என்றாள் லக்ஷ்மி.

''அந்தப் பொண்ணை உள்ளே கூப்பிடு லக்ஷ்மி. வருஷப் பிறப்பன்னைக்கு வந்திருக்கு. வாட்டப்பட வேண்டாம். நாங்களும் புள்ளைகுட்டி உள்ள குடும்பம் தாம்மா. நீ உள்ளே வா. எங்க வீட்லே இரு சுசிலா வர்ற வரைக்கும்'' என்றாள் பூரணி.

தயக்கத்தோடு உள்ளே நுழைந்த அவளைக் கைப்பற்றி உள்ளே அழைத்துச் சென்று, எல்லாருக்கும் அறிமுகப்படுத்தினாள் லக்ஷ்மி. பூஜையின் போதும், அதன் பிறகு சாப்பாட்டின் போதும், அவர்களுள் ஒருத்தியாய் இணைந்து கொண்டாள் அவள்.

கணபதி மெல்ல அவளை விசாரிக்கத் தொடங்கினார். ''உம்பேரு என்னம்மா? என்ன விஷயமா இந்த ஊருக்கு வந்தே?'' என்றார்.

''எம் பேரு விஜயா. திருச்சி சொந்த ஊரு. சுசிலா குடும்பம் மொதல்லே எங்க வீட்டுப் பக்கத்திலேதான் குடியிருந்தாங்க. ரொம்பவும் குளோஸ் ப்ரெண்ட்ஸ் நாங்க. ஸ்கூல் பைனல் வரைக்கும் ஒண்ணாப் படிச்சோம். அப்புறம், அவங்க அப்பாவுக்கு ட்ரான்ஸ்பர் ஆயிட்டதுன்னு அவ இங்கே வந்துட்டா. எனக்கு பாங்க்லே வேலை கெடச்சிருக்கு. கோயமுத்தூர்னு சொன்னதுமே சுசிலா ஞாபகம்தான் வந்தது. வர்றதா லெட்டர் போட்டுட்டுக் கிளம்பி வந்துட்டேன். ஹாஸ்டல்லே தங்கலாம்னு உத்தேசம். சுசிலா எப்ப வருவாளோ தெரியலையே?'' என்றாள் கவலையுடன்.

''அட அதைப் பத்திக் கவலைப் படாதேம்மா. எந்த பாங்க்லே வேலை கெடச்சிருக்கு?'' என்றார் கணபதி.

''ஐ.ஓ.பி. ஆர்.எஸ். புரம் ப்ரான்ஞ்ச்'' என்றாள் விஜயா.

''அட, ரொம்ப நல்லதாப் போச்சு. எங்க வீட்டுக்காரருக்குக் கூட அதே ப்ரான்ஞ்ச்லேதான் வேலை. நீங்க ஒண்ணும் கவலைப் படாதீங்க. நாளைக்கு அவரையே கூட்டிட்டுப் போகச் சொல்றேன். லேடீஸ் ஹாஸ்டலுக்கும் எங்க அண்ணாகிட்ட சொல்லி ட்ரை பண்ணச் சொல்றேன்'' என்றாள் லக்ஷ்மி.

விஜயாவுக்கு ஆச்சர்யமாய் இருந்தது. முன்பின் பார்த்திராதவர்கள், எல்லாரும் எப்படி உதவி செய்கிறார்கள் என்று அதிசயப்பட்டுப் போனாள்.

**க**ல்யாணமான இந்தப் பத்து வருடங்களாய் மனோகர் எந்த அழகிய பெண்ணைப் பார்த்தாலும் சலனப்படவில்லை. ஆனால் சின்ன மலர் போல இருக்கும் விஜயாவைப் பார்த்ததும், அவன் மனத்தில் மெல்லிய ஏக்கம் வந்தது. அவனையும் அறியாமல், விஜயாவையும், லக்ஷ்மியையும் ஒப்பிட்டுப் பார்த்தது மனம். 'நன்றி கெட்ட மனமே, விஜயா சின்னப் பெண். நான் இரண்டு குழந்தைகளுக்குத் தந்தை. இனிமையான சுபாவம் கொண்டவள் என் மனைவி லக்ஷ்மி' என்று அதை அப்போதைக்கு அடக்கி வைத்தான்.

ஆனால், அடுத்தநாள் இருவரும் ஒன்றாக ஆபீசுக்குச் செல்லும் பொழுது யாரோ ஒருவர், 'ஆஹா, என்ன அற்புதமான ஜோடி' என்றதும் மனம் பரவசப் பட்டது. ஆனால் மேலுக்கு, ''தப்பா நெனச்சுக்காதீங்க. சேர்ந்து போனாலே ஜோடின்னு விவஸ்தையில்லாம பேசறாங்க ஜனங்க'', என்றான் ஒப்புக்கு, விஜயாவிடம். பாங்கிலும் சரி, அவர்கள் இருவரையும் ஒன்றாகப் பார்த்தவுடன், ஓரிருவர் வாய்விட்டே ஜோடிப் பொருத்தத்தைக் கூறினர்.

சங்கடத்தோடு விலகிய மனோகர், மாலை அவளை பஸ்ஸேற்றித் தனியாய் அனுப்பிவிட்டு, தான் நேரம் கழித்தே திரும்பினான். நல்லவேளை, சுசீலா அன்று திரும்பி விடவே, அவர்கள் வீட்டுக்குச் சென்று விட்டாள் விஜயா. பிரகாசம் ஒரே வாரத்தில் லேடீஸ் ஹாஸ்டலில் இடம் ஏற்பாடு செய்து தந்து விட்டான், விஜயாவுக்கு. விஜயா, அடிக்கடி வருவதாகக் கூறிவிட்டு, நன்றியுடன் கிளம்பி விட்டாள். ஆனால் பாங்கில் இருவரும் தினமும் பார்த்துக் கொண்டே ஆக வேண்டியிருந்தது.

வேலையில் என்ன சந்தேகம் என்றாலும், அவனிடமே ஓடிவந்தாள் விஜயா. என்ன உதவி வேண்டுமானாலும் அவனிடமே கேட்டாள். விகல்பமில்லாமல் பழகினாள் அவனுடன்.

மனசுக்குள் சைத்தான் புகுந்து விட்டது மனோகருக்கு. வலியப் போய் அவளுடன் சிரித்துப் பேசத் தொடங்கினான். மாலையில் வீட்டுக்கு வந்ததுமே, லக்ஷ்மியைப் பார்த்தாலே எரிச்சல் வந்தது. காரணமேயில்லாமல் அவளிடம் சிடுசிடுக்கத் தொடங்கினான். குழந்தைகளிடமும் எரிந்து விழுந்தான். லக்ஷ்மியை அழைத்துக் கொண்டு வெளியே செல்லவே வெட்கப்பட்டான். அவளுடன் முகம் பார்த்துப் பேசுவதையும் நிறுத்தியபோது, ஓராண்டு கழிந்திருந்தது.



இன்ஸ்பெக்டர் : ஏன்யா இவனைப் பிடிச்சிட்டு வந்தே?

கான்ஸ்டபிள் : போலீஸ் வேடம் போட்டுக்கிட்டு, திருட்டுத்தனமா மாமூல் வசூல் பண்றான் சார்!

- ராஜாசிங் ஜெயக்குமார்

புத்தாண்டு அன்று, வழக்கம்போல் எல்லாம் எடுத்து வைத்துவிட்டுக் கணவனை எழுப்பினாள் லக்ஷ்மி. ஒரு வருடமாய்க் கணவனின் போக்குக்குக் காரணம் புரியாமல் குழம்பியிருந்தாள் அவள். இன்று சரியாகிவிடும், நாளை சரியாகிவிடும் என்று தினமும் எதிர் பார்த்து ஏமாந்தாள். புத்தாண்டாவது குதூகலத்தைக் கொண்டுவராதா என்ற ஆசையுடன், கணவனைத் துயிலெழுப்பினாள்.

''என்ன கேடுகெட்டுப் போச்சு இப்போ. உன் தரித்திர மூஞ்சியிலேதானே தினமும் முழிக்கறேன். என்னை நிம்மதியாத் தூங்க விடு. இன்னொரு தடவை 'சித்திரக்கனி பாரு'ன்னு சொன்னே கன்னம் பழுத்துடும். போ, இங்கேயிருந்து'' என்று கத்தினான் மனோகர்.

பத்துவருடமாய்ப் பாசத்தைப் பொழிந்த கணவன், ஒருவருடமாய் நெருப்பாய்த் தகிக்கிறான். ஆனாலும், படபடவென்று வார்த்தைகளைக் கொட்டுவது இதுவே முதல் முறை என்பதால் அழுகையை அடக்கிக் கொண்டு வெளியேறினாள் லக்ஷ்மி.

காரணம் கேட்ட பெற்றோரிடம் ''மனசு சரியில்லை'' என்று ஒரே வார்த்தையில் சொல்லி விட்டுக் குப்புறக் கவிழ்ந்து கொண்டான். 'லக்ஷ்மியைத் தான் திருமணம் செய்து கொள்ளாமலிருந்திருந்தால், விஜயா போன்ற அழகி தன் மனைவியாக வாய்த்திருப்பாள்', என்ற எண்ணம்தான் தன் மன வேறுபாட்டுக்குக் காரணம் என்று வாய்விட்டுச் சொல்ல முடியுமா!

விஜயா வந்திருப்பாள் போலும் சுசீலாவின் வீட்டுக்கு. மனோகரின் படுக்கையறையை ஒட்டியே சுசீலாவின் வீட்டு டிராயிங் ரூம் இருந்ததால் அவர்கள் பேசுவது தெளிவாகக் காதில் விழுந்தது.

விஜயா சொன்னாள், ''சுசீ, எனக்கு மாப்பிள்ளை பார்த்திருக்கறதா அப்பா லெட்டர் போட்டிருக்கார். இந்த சண்டே ஊருக்குப் போறேன். அநேகமா இந்தத் தடவை நான் போகும்போது நிச்சயம் பண்ணிடுவாங்கன்னு நினைக்கறேன்.''

''ஹேய், கன்கிராட்ஸ். ஆனா, மாப்பிள்ளை உனக்கு ஏத்தமாதிரி அழகா இருக்காரான்னு பார்த்துட்டுச் சரின்னு சொல்லு'' என்றாள் சுசீலா.

''என்னடி, படிச்ச பொண்ணான நீயே இப்படிப் பேசறே? அழகு எத்தனை நாளைக்கு நிலைச்சு நிக்கும். வயசான பிறகு எல்லாரும் அழகோடவா இருக்கப் போறோம். அழகா மட்டும் இருந்து குணம் சரியா அமையலேன்னா ஆயுசு பூராவும் அந்த மாதிரி ஆளோட குடும்பம் நடத்தறது எத்தனை கஷ்டம். இதோ, உன் பக்கத்து வீட்டு மனோகர் ஸார் இருக்காரே அவரு ரியலி எ ஜென்டில்மேன். அழகைப் பாக்காம குணத்துக்காக லக்ஷ்மி அக்காவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டிருக்காரே. அந்த மாதிரி வாழ்க்கைதான் நான் வேண்டறது'' என்றாள் விஜயா.

அதற்கு மேல் அவர்கள் பேசியது காதில் விழவில்லை, மனோகருக்கு. குணவதியான லக்ஷ்மியை மணந்து கொள்ளாமல், அழகான, குணம் சரியில்லாத பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் தன் வாழ்க்கை, தன் பெற்றோர், தங்கைகள் கதி என்ன ஆயிருக்கும் என்ற கேள்விகள் மனத்தை அரித்தன.

''லக்ஷ்மி நான் சித்திரைக்கனி பாக்கணும். வந்து கூட்டிட்டுப் போ'' என்று இனிமையான குரலில் கணவன் அழைப்பதைக் கேட்டு லக்ஷ்மி மட்டுமல்ல, கணபதியும் பூரணியும் கூட ஆனந்த அதிர்ச்சி அடைந்தனர்.

## பம்பாய்க் கடிதம் :

# ஆத்திரத்தைக் கிளப்பிய ஆமைவேக ஆட்டம்!

பம்பாய்வாழ் கிரிக்கெட் வெறியர்களுக்கு ரவி சாஸ்திரி மேல் அளவிட முடியாத கோபம். இங்கிலாந்து, ஆஸி அணிகளிடம் நாம் குறுகிய ரன் வித்தியாசத்தில் தோற்றதன் காரணமே சாஸ்திரியின் ஆமை வேக பாட்டிங்தான் என்று சுட்டிக்காட்டி, அவரது புகைப்படத்துக்குச் செருப்பு மாலை போட்டு, கொடும்பாவி கொளுத்தித் தங்கள் ஆத்திரத்தைக் காட்டிக் கொண்டனர்! பாக் அணிக்கு எதிராக சாஸ்திரி ஆடவில்லை என்பதே இவர்கள் கோபத்தைக் குறைத்தது.

### சீசன் டிக்கட்டும் சிவசேனாவும்

ரயில் பயணிகளுக்கான கட்டண உயர்வை எதிர்த்துச் சென்னையில் நடந்த ரயில் மறியல் போராட்டத்தை விட, பம்பாயில் நடந்த சிவசேனாவின் 'ரயில் ரூகோ' போராட்டம் அதிர்ச்சியையும், சங்கடங்களையும் கொடுத்தது! எதிர்ப்பாளர்கள் 'பாந்துரப்' ஸ்டேஷன் அருகே, ஒரு மின்சார ரயிலை முழுவதுமாக எரித்தனர்; சிக்னல்களை உடைத்து நொறுக்கினர். அதனால் பம்பாய் புறநகர் ரெயில் போக்குவரத்தும் வெளி ஊர்களிலிருந்து வரும் தொலைதூர ரயில்களும் பெரிதும் பாதிக்கப்பட்டன. பம்பாய்வாசிகளில் ஏறக்குறைய 70% பேர் வேலைக்குச் செல்ல ரயிலையே நம்பியிருப்பவர்கள். ரயில்கள் அங்கங்கே நின்றுவிட, வேலைக்குச் செல்ல முடியாமல் தவித்தார்கள். ஏறக்குறைய மூன்று நாட்கள் பம்பாய் நகரத்தையே கிடுகிடுக்க வைத்த பின்னர், பால் தாக்கரே தம் போராட்டத்தைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்தார். ''பரீட்சைக்குச் செல்லும் மாணவ மாணவிகளின் நலன் கருதி ரயில் போக்குவரத்துக்கு இடையூறு விளைவிக்க மாட்டோம். ஆனால் சீசன் டிக்கெட்/பயண டிக்கெட் வாங்காமல் செல்லும் போராட்டம் தொடரும்'' என்று அறிவித்திருக்கிறார்!

### பால்கிவாலாவின் பட்ஜெட் விமர்சனம்

பம்பாய் பிராபோர்ன் கிரிக்கெட்



☛ பால் தாக்கரே



☛ பால்கிவாலா



☛ ரவிசாஸ்திரி

ஸ்டேடியத்தில் ஒரு லட்சத்துக்கும் அதிக மான கூட்டத்தினர் முன் தமது பட்ஜெட் விமர்சனத்தை நிகழ்த்தினார் பொருளாதார மேதை நானி பால்கிவாலா. 1958 இல் இவர் விமர்சனத்தைக் கேட்க 800 பேர்தான் கூடினர்! சென்ற ஓர் ஆண்டைத் தவிர ஒவ் வோர் ஆண்டும் பட்ஜெட்டை உடனுக் குடன் அலசி விடுகிறார்! கூட்டமும் படிப் படியாக அதிகரித்து வருகிறது. பால்கி வாலாவின் பட்ஜெட் விமர்சனத்தில் இந்தத் தடவை காரம் குறைவு.

## சிவராத்திரி விழா

எலிஃபண்டா குகையிலுள்ள சிவன் கோயில், மத்திய பம்பாயில் உள்ள பாபுல் நாத் கோயில் மற்றும் அனேக சிறிய பெரிய சிவன் கோயில்களில் இந்த ஆண்டு வெகு விமரிசையாக சிவராத்திரி கொண்டாடப் பட்டது. பம்பாயின் 'பெஸ்ட்' பஸ் சர்வீஸ் பாபுல்நாத் கோவிலுக்கு மட்டும் 64 ஸ்பெஷல் பஸ்கள் விட, அதை 34,000 பேர் பயன்படுத்திக் கொண்டனர். ஆயிரக்கணக் கானோர் கடலில் ஸ்நானம் செய்தனர். கோயில் வாசல்களில் சிறப்புப் பந்தல்கள் போட்டு, இரவு முழுதும் சங்கீதக் கச்சேரி கள், ஆர்கெஸ்ட்ரா இசை... சிவராத்திரி யையொட்டிய நாட்களில் சிவன் இரவு களில் கண்விழித்து வேடன் ரூபத்தில் வந்து மக்கள் நலன் பேணுகிறார் என்பது மகாராஷ்டிரரின் நம்பிக்கை.

– ராஜீவி நரசிம்மன்

# சிவகாமியின்

## நாற்பத்தெட்டாம் அத்தியாயம்

# நாற்சந்தி நடனம்

கடவுள் ஒருவர் இருப்பது உண்மையானால், அவர் கருணா மூர்த்தி என்பதும் உண்மையானால், உலகத்தில் ஏன் இத்தனை துன்பங்களை வைத்திருக்கிறார்? மனித வர்க்கம் ஏன் இத்தனை கஷ்டங்களுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது? - இந்தக் கேள்விகள் ஆதிகாலந் தொட்டு கேட்கப் பட்டு வருகின்றன.

உள்ளத்தில் உண்மை ஒளிகொண்ட மகான்கள் மேற்படி கேள்விகளுக்கு விடையும் சொல்லி வந்திருக்கிறார்கள்.

மனிதர்கள் துன்பம் என்று நினைப்பது உண்மையில் துன்பம் அல்ல. சூரியனை மேகம் மூடுவது போல் நமது அறிவை மூடியிருக்கும் மாயை காரணமாகச் சில விஷயங்களைத் துன்பம் என்று நாம் கருதுகிறோம். உண்மையில் துன்பமும் ஒருவித இன்பமேயாகும்.

> *''அன்பு வடிவாகி நிற்பள்*
> *துன்பமெலாம் அவள் இழைப்பள்*
> *ஆக்கநீக்கம் யாவும் அவள் செய்கை*
> *- அவள்*
> *ஆனந்தத்தின் எல்லையற்ற*
> *பொய்கை!''*

என்று பராசக்தியைக் குறித்து இந்தக் காலத்து மகாகவியான ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடியிருக்கிறார்.

ஆனால், அன்பு வடிவான ஜகன்மாதா ஆனந்தத்தின் எல்லையற்ற பொய்கையான அன்னை பராசக்தி - ஏன் தன் மக்களுக்குத் துன்பம் இழைக்கிறாள்; ஏன் கஷ்டங்களை அளிக்கிறாள்?

துன்பம் என்றும், கஷ்டம் என்றும் நாம் எண்ணிக் கொள்கிறோமே தவிர, உண்மையில் அவை துன்பங்களுமல்ல; கஷ்டங்களுமல்ல. அறிவுத் தெளிவோடு பார்த்தால், நாம் துன்பம் என்று நினைத்ததும் இன்பந்தான்; கஷ்டம் என்று கருதியதும் சுகந்தான்.

இந்தத் தத்துவத்தை நம்புவது அவ்வளவு சுலபமான காரியமல்ல. ''துன்பத்திலே இன்பமாவது, கஷ்டத்திலே சுகமாவது?'' என்ற அவநம்பிக்கை உண்டாகத்தான் செய்யும்.

ஆயினும் நமது வாழ்க்கை அநுபவத்திலேயே சில விஷயங்களை ஆலோசித்துப் பார்த்தால் மேற்படி தத்துவத்தில் உண்மை உண்டு என்று அறியலாம்.

சோக ரஸமுள்ள கதைகள், காவியங்களைப் படிக்கிறோம். சோக மயமான நாடகங்களைப் பார்க்கிறோம்; சோகத்தை ஊட்டும் கீதங்களைப் பாடுகிறோம், கேட்கிறோம்.

இப்படியெல்லாம் துன்பத்தை நாமாகத்தானே தேடி அனுபவிக்கிறோம்? எதற்காக? அந்தத் துன்பங்களிலேயெல்லாம் உள்ளுக்குள்ளே இன்பம் பொதிந்திருப்பதனாலேதான்.

நமது வாழ்க்கையில் எத்தனையோ கஷ்டங்களை அனுபவிக்கிறோம். அனுபவிக்கும் போது கஷ்டமாக இருக்கிறது. 'இது சகிக்க முடியாத கஷ்டம்' என்று தோன்றுகிறது. 'இந்த வாழ்க்கையே வேண்டாம்' என்று தீர்மானிக்கிறோம்.

எல்லாக் கஷ்டங்களையும் எப்படியோ சகித்துக் கொள்கிறோம். அப்படி நாம் அனுபவித்த சகிக்க முடியாத கஷ்டங்களைச் சில வருஷ காலம் கழித்து நினைத்துப் பார்க்கும் போது, ஒருவகை அபூர்வ இன்பம் ஏற்படுகிறது. பழைய கஷ்டங்களை நினைத்துப் பார்ப்பதிலும் அவற்றைக் குறித்துப் பேசுவதிலும் சந்தோஷமே அடைகிறோம்.

சீதாதேவி வனவாசத்தின் போது அநுபவித்த துன்பங்களுக்கு எல்லையே யில்லை. அவ்வளவு துன்பங்களைப்

# சபதம்

பெண்ணாய்ப் பிறந்த யாரும் அனுபவித்திருக்க முடியாது. ஆயினும் அயோத்தி அரண்மனையில் ஸ்ரீ ராமபிரானுடைய பட்டமகிஷியாகச் சீதை வாழ்ந்த காலத்திலும் அதிலும் கர்ப்பம் தரித்திருந்த சமயத்தில், ''உனக்கு எதிலாவது ஆசையுண்டா?'' என்று ராமன் கேட்ட போது, சீதை என்ன சொன்னாள்? ''மறுபடியும் காட்டுக்குப் போய் அங்கே நான் கஷ்டப்பட்ட இடங்களையெல்லாம் பார்க்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது!'' என்றாள்.

''துன்பம் என்பது உண்மையில் துன்பம் அல்ல. அவ்விதம் நினைக்கச் செய்வது மாயையின் காரியம். துன்பத்திற்குள்ளேயும் இன்பந்தான் இருக்கிறது!'' என்று சொல்லும் வேதாந்த உண்மையை மேற்படி சீதையின் கோரிக்கை நன்கு நிரூபித்திருக்கிறதல்லவா?

சிவகாமியை நாற்சந்தியில் நெருக்கடியான தருணத்தில் நிறுத்தி விட்டு மேற்கண்டவாறு நாம் வேதாந்தம் பேசிக்கொண்டிருப்பது பற்றி வாசகர்களின் மன்னிப்பைக் கோருகிறோம். மேலே சிவகாமியின் காரியத்தை நாம் அறிந்து கொள்வதற்கு மேற்கண்ட பூர்வ பீடிகை அவசியமாயிருக்கிறது.

தமிழகத்து ஸ்திரீ புருஷர்களை சாட்டையடித் துன்பத்திலிருந்து பாதுகாப்பதற்காகத் தளபதி விருபாக்ஷன் அவளை நாற்சந்தியில் நடனமாடச் சொன்னான். அவ்விதம் செய்வது தெய்வீகமான, பரத நாட்டியக் கலையையே அவமதிப்பதாகும் என்று எண்ணி முதலில் சிவகாமி, ''முடியாது!'' என்றாள்.

ஆனால், விருபாக்ஷனின் கட்டளையின் பேரில், 'சுளீர்' என்ற சாட்டையடிச் சப்தம் கேட்டதும் சிவகாமியின் மன உறுதி பறந்து போய் விட்டது.

மறுகணம் வாதாபி நகரின் நாற்சந்தியில் சிவகாமி தேவி நடனம் ஆடத் தொடங்கினாள். அற்புதமாக ஆடினாள்.

துன்பத்திலே இன்பம் உண்டு என்னும் வாழ்க்கைத் தத்துவம் நன்கு விளங்கும்படி ஆனந்தமயமாக ஆடினாள்.

சகிக்க முடியாத கஷ்டத்திலிருந்து எல்லையற்ற ஆனந்தம் பிறக்கும் என்னும் உண்மை நிதரிசனம் ஆகும்படி ஆடினாள்.

தன்னை மறந்து, வெளி உலகத்தை மறந்து, காலதேச வர்த்தமானங்களை மறந்து ஆடினாள். அந்தக் காட்சியானது அழகுத் தெய்வம் ஆனந்த வெறிகொண்டு ஆடுவது போலிருந்தது.

**வா**தாபியின் வீதியில் சிவகாமி நடனம் ஆடிய போது வானமும் பூமியும் அசைவற்று நிற்பது போல் தோன்றியது.

வீதியிலே போய்க் கொண்டிருந்த வாதாபி நகர மாந்தர்கள் அப்படி அப்படியே நின்று அந்த விந்தையைப் பார்த்தார்கள்.

பந்தமுற்ற தமிழகத்து ஸ்திரீ புருஷர்கள் அசைவற்று நின்றார்கள்; கையில் சாட்டை பிடித்த கிங்கரர்களும் சும்மா நின்றார்கள். அவர்களுடைய தலைவன் விருபாக்ஷனும் அசையாமல் நின்றான்.

அனைவரும் பார்த்த கண்கள் பார்த்த வண்ணம், சிற்ப வடிவங்களைப் போல் நின்றார்கள். காலம் போவதே தெரியாமல் மெய்ம்மறந்து உலகத்தை மறந்து நின்றார்கள்.

சூரியன் மலைவாயிலில் விழுந்தது. கோட்டைக் கதவுகள் சாத்துவதற்குரிய அஸ்தமன பேரிகை முழக்கம் கேட்டது.

சிவகாமியின் நடன பரவசத்துக்கு அதனால் பங்கம் ஏற்பட்டது. ஆட்டம் ஆடுவதை நிறுத்திச் சிவகாமி நின்றாள். அத்தனை நேரமும் ஏதோ ஓர் அதிசய ஆனந்த உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவள் திடீரென்று பூவுலகத்துக்கு வந்தவளாய்ச் சுற்று முற்றும் பார்த்தாள்.

தான் நின்றிருந்த இடத்தையும் இத்தனை நேரம் செய்த காரியத்தையும் நினைவுக்குக் கொண்டு வந்தாள்.

அவள் உள்ளத்தில் சகிக்க முடியாத வெட்கத்துக்கும் துன்பத்துக்கும் மத்தியில் இன்பமும் பெருமையும் உதித்தன.

கட்டுப்பட்டு நின்ற பல்லவ நாட்டு ஸ்திரீ புருஷர்களைச் சிவகாமி நோக்கினாள். அவர்களுடைய கண்களிலே ததும்பிய நன்றியறிதலைக் கவனித்தாள்.

யாருடனும் ஒரு வார்த்தையும் பேசாமல் பல்லக்கில் போய் ஏறிக் கொண்டாள். பல்லக்கு மாளிகையை அடைந்தது.

அமரர் **கல்கி**

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்

# பிக்ஷுவின் வருகை

சுக்கில பட்சத்துப் பிரதமையில் சிவகாமி வாதாபி நகரின் நாற்சந்தியில் நடனம் ஆட ஆரம்பித்தாள்.

சுக்கில பட்சம் முடிந்து கிருஷ்ண பட்சம் வந்தது. கிருஷ்ண பட்சம் முடிவடைந்து மீண்டும் சுக்கில பட்சம் வந்தது.

சிவகாமியின் வீதி நடனம் இன்னும் நடந்து கொண்டே இருந்தது.

தளபதி விரூபாக்ஷன் நடன அரங்கத்தை அடிக்கடி மாற்றிக் கொண்டிருந்தான். வாதாபி நகரின் முக்கிய நாற்சந்திகளை ஒவ்வொன்றாக அவன் தேர்ந்தெடுத்து அங்கங்கே கொண்டு போய்த்





தமிழகத்து ஸ்திரீ புருஷர்களை நிறுத்தினான்.

சிவகாமியும் அங்கங்கே போய் நடனமாடினாள்.

அந்தக் காட்சியைப் பார்ப்பதற்குத் தினந்தோறும் மக்கள் பெருந்திரளாகக் கூடினார்கள். ஸ்திரீகளும் புருஷர்களும் சிறுவர் சிறுமியர்களும் திரண்டு வந்தார்கள்.

அரசாங்க அதிகாரிகள் ரதம் ஏறி வந்தார்கள். அந்தப்புரத்து ராணிகளும் சேடிகளும் பல்லக்கில் ஏறி வந்தார்கள்.

புலிகேசிச் சக்கரவர்த்தி காஞ்சியிலிருந்து சிறைப் பிடித்துக் கொண்டு வந்த நாட்டியப் பெண், வாதாபி நகரின் வீதிகளில் நடனமாடுகிறாள் என்னும் செய்தி

எங்கெங்கோ பரவலாயிற்று.

அதன் பயனாக அக்கம் பக்கத்து ஊர்களிலேயிருந்தும் ஜனங்கள் மேற்படி காட்சியைப் பார்க்க வந்தார்கள். தூர தூரங்களிலிருந்தெல்லாம் ஜனங்கள் வர ஆரம்பித்தார்கள். தேசமெங்கும் நானா திசைகளிலும் இதைப் பற்றியே பேச்சாயிருந்தது.

சிவகாமியின் விஷயத்தில் வாதாபி ஜனங்களின் மனோபாவம் முதலில் ஒரு விதமாயிருந்தது. போகப் போக அவர்களுடைய மனோபாவம் வேறு விதமாக மாறிக் கொண்டிருந்தது.

முதலில் அந்த அற்புத நடனத்தைப் பார்த்துவிட்டு வாதாபி மக்கள் பிரமித்துப் போனார்கள். "இப்படியும் ஒரு அற்புதக் கலை உண்டா?" என்று வியந்தார்கள்.

ஊரை விட்டு, உற்றாரை விட்டு, சொந்த நாடு, நகரத்தை விட்டுத் தூர தேசம் வந்திருக்கும் அந்தக் கலைச் செல்வியிடம் அவர்களுக்கு அன்பும் ஆதரவும் பச்சாத்தாபமும் ஏற்பட்டன.

அவர்களில் பலர் சிவகாமியுடன் வார்த்தையாட விரும்பினார்கள். தங்கள் வியப்பையும் மதிப்பையும் அன்பையும் அபிமானத்தையும் வெளியிட விரும்பினார்கள். அவள் வசித்த மாளிகைக்குப் போய் அவளுடன் சிநேகம் செய்து கொள்ள விரும்பினார்கள். தத்தம் வீட்டுக்கு அவளை அழைத்து உபசரிக்கவும் ஆசைப்பட்டார்கள்.

ஆனால், வாதாபி ஜனங்களின் சிநேக மனப்பான்மை சிவகாமியின் உள்ளத்தில் எவ்வித எதிரொலியையும் உண்டாக்கவில்லை.

நடனம் ஆடும் போது ஏற்பட்ட கிளர்ச்சிக்குப் பின்னர் இயற்கையாகத் தோன்றும் சோர்வும் ஏற்கெனவே குடிகொண்டிருந்த மனக்கசப்பும் சேர்ந்து சிவகாமியை அவர்களுடன் முகங்கொடுத்துப் பேச முடியாமற் செய்து வந்தன.

நாளாக ஆக, "அந்தத் தமிழகத்து நடனப் பெண் ரொம்ப கர்வக்காரி!" என்ற செய்தி நகரமெங்கும் பரவிற்று.

ஆரம்பத்தில் ஏற்பட்டிருந்த அபிமானம், அனுதாபம் எல்லாம் வெறுப்பும் பரிகாசமுமாக மாறலாயின. சிவகாமி வரும்போதும் போகும்போதும், ஜனங்கள் அவளைப் பற்றிப் பரிகாசமாகப் பேசுவதும் கேலி செய்து சிரிப்பதும் அதிகமாகி வந்தன.

ஆரம்பத்தில் சிவகாமியின் நடனத்தை "அற்புதம்" என்றும் "தெய்வீகக் கலை" என்றும் சொல்லி வந்த அதே ஜனங்கள் கொஞ்ச நாளைக்கெல்லாம் அதைப் "பைத்தியக்காரியின் கூத்து" என்று சொல்லத் தொடங்கினார்கள்!

சிவகாமி சிவிகையில் போகும் போது சிறுவரும் சிறுமிகளும் ஊளையிட்டுக் கொண்டு பின்னால் ஓடினார்கள். சில சமயம் மண்ணையும் அவள் மீது வீசி எறிந்தார்கள்.

இதையெல்லாம் சிவகாமி சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவளுடைய நெஞ்சில் வைரம் பாய்ந்திருந்தது. அசைக்க முடியாத ஓர் உறுதி அவள் மனத்தில் ஏற்பட்டிருந்தது.

புகழையும் இகழையும் பாராட்டையும் நிந்தனையையும் ஒன்றாகக் கருதும் மனோநிலையைச் சிவகாமி அடைந்திருந்தாள்.

கடவுளின் அழைப்பை எதிர்பார்த்துக் கொண்டு இந்தப் பூவுலகத்தில் தாமரை இலைத் தண்ணீர் போல் வாழும் முற்றும் உணர்ந்த ஞானியை அவள் ஒத்திருந்தாள்.

சிவகாமி வாதாபி வீதிகளில் நடனம் ஆட ஆரம்பித்து ஏறக்குறைய ஒன்றரை மாத காலம் ஆயிற்று.

ஒருநாள் வழக்கம் போல் சிவகாமி நடனம் ஆடிக் கொண்டிருந்தாள். சூரியாஸ்தமன பேரிகை முழக்கம் கேட்டது.

சிவகாமி ஆட்டத்தை நிறுத்தினாள். சற்று மூச்சு வாங்குவதற்காக நின்றுவிட்டுப் பல்லக்கை நோக்கிச் செல்லத் திரும்பினாள்.

அவள் திரும்பிய திக்கில் தோன்றிய ஒரு தோற்றம் அவளைச் சிறிது நேரம் மனம் குழம்பித் திகைத்து நிற்கும்படி செய்து விட்டது. அந்தத் தோற்றம் நாகநந்தியடிகளின் உருவந்தான்.

வியப்பினால் விரிந்த கண்களில் கோபாக்னியின் பொறி பறக்க, இமையா நாட்டத்துடன் நாகநந்தி தன்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பதைச் சிவகாமி

---

"என்னது பொதுக் கூட்டத்தில் நம்ம தலைவர் தாடி வெச்சுக்கிட்டு, டர்பன் கட்டிக்கிட்டு உட்கார்ந்திருக்கார்?"

"ஊம்... அதுவா? தமிழகத்தைப் பஞ்சாபாக மாத்தப் போறாராம்!"

- வேதபுரி எஸ். ரமேஷ்



## அருள்வாக்கு



**ப**லர் சேர்ந்து பண்ணுகிற பஜனை ஒருபுறம் இருக்கட்டும். ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள அனைவரும் மாலை வேளைகளில் வீட்டிலேயே ஒரு பத்து நிமிஷமாவது பகவந் நாமங்களைப் பாடி பஜனை செய்ய வேண்டும். இதில் காரிய சாத்தியமில்லாத சிரமம் எதுவும் இல்லை. குடும்பத்தினர் எல்லோரும் பூஜை அறையில் - அல்லது பூஜைக்கென்று அறை இல்லாவிட்டால், ஒரு குத்து விளக்கை ஏற்றி வைத்து, அதன் முன் உட்கார்ந்து, கீர்த்தனங்களைப் பாட வேண்டும்; நாமாவளிகளை கானம் செய்ய வேண்டும். அவரவரும் தங்களுக்குரிய நித்யகர்மாநுஷ்டானங்களை விடாமல் செய்து விட்டு, அதோடு பஜனையும் செய்ய வேண்டும். பகவானைப் பாடுவதற்கு வெட்கமே வேண்டாம். கருணையே உருவான கடவுளின் நாமத்தைச் சொல்வதில் வெட்கத்துக்கு இடம் ஏது? பெரிய சங்கீத ஞானம், ராக பாவம், சாரீர வசதி இல்லாவிட்டாலும் பரவாயில்லை. பக்தி பாவனைதான் முக்கியம். ஏதேதோ விளையாட்டுக்களில் திரிந்து கொண்டிருக்கிற குழந்தை, அம்மாவின் நினைப்பு வந்ததும் அவளிடம் வந்து, 'அம்மா, அம்மா' என்று கத்துகிறதல்லவா? அதில் வெட்கமோ, சங்கீத அழகோ இல்லை. லோக மாதாவான பரமாத்மாவை லௌகிக வியாபாரங்களிடையே சிறிது நேரமாவது நினைத்து, இப்படியே ராமா, கிருஷ்ணா, சிவா, அம்பா என்று கத்த வேண்டும். இந்தப் பழக்கம் ரொம்பவும் நல்லது. நம் நித்திய க்ஷேமத்தையும் ஆனந்தத்தையும் பெருக்கவல்ல பெரிய நிதி இது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

பார்த்தாள்.

நாகநந்தியின் முகபாவம் கணநேரத்தில் மாறியது. கண்களில் கோபாக்னி மறைந்து பரிதாபம் தோன்றியது. அவருடைய கண்களின் பார்வையும் முகத்தின் பாவமும், ''மன்னித்து விடு'' என்று கெஞ்சுவது போன்ற உணர்ச்சியை ஊட்டின.

இதனால் மேலும் திகைப்படைந்த சிவகாமி, மெதுவாகச் சுயப்பிரக்ஞை அடைந்து குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டு தலைகுனிந்த வண்ணம் நடந்து சென்று பல்லக்கில் ஏறிக் கொண்டாள்.

பல்லக்கு வழக்கம் போல் மாளிகையை நோக்கிச் சென்றது.

ஆனால், சிவகாமியின் உள்ளம், ஜனக் கூட்டத்தின் நடுவே நின்ற நாகநந்தி யடிகளிடம் இருந்தது.

''இந்தப் புத்த பிக்ஷு யார்? வேடம் பூண்ட வாதாபிச் சக்கரவர்த்திதானா? உருவம் அப்படியே இருக்கிறது. ஆனால் கண்களின் தோற்றத்திலும் முகபாவத்திலும் எவ்வளவு வித்தியாசம்? உணர்ச்சி என்பதே இல்லாத கல்நெஞ்சைப் பிரதிபலிக்கும் புலிகேசியின் முகத்துக்கும் கனிவும் இரக்கமும் கலைப் பரவசமும் ததும்பிய பிக்ஷுவின் முகத்துக்கும், எவ்வளவு வித்தியாசம்...?''

பிக்ஷுவின் தோற்றம் சிவகாமிக்குப் பல்லவ நாட்டையும் அரண்ய வீட்டையும் நினைவூட்டியது. அந்தக் காலத்து வாழ்வெல்லாம் ஞாபகம் வந்தது. உண்மையில் ஒரு வருஷத்துக்கு மேல் ஆகவில்லை. ஆனால், எத்தனை யுகம் ஆகிவிட்ட மாதிரி தோன்றுகிறது!

**மா**ளிகையை அடைந்த பிறகும் சிவகாமியின் உள்ளம் வழக்கமான அமைதியை அடையவில்லை. ஏதோ ஓர் ஆவல், அர்த்தமில்லாத பரபரப்பு, அவள் மனத்தில் குடிகொண்டிருந்தது.

அவளுடைய உள்ளம் அப்படி யாரை எதிர்பார்த்தது? அவளுடைய கண்கள் யாரை எதிர்பார்த்து அவ்விதம் அடிக்கடி வாசற்பக்கம் நோக்கின? நாகநந்தி பிக்ஷுவையா?

இரவு ஒரு ஜாமம் முடியும் தறுவாயில் நாகநந்தி அந்த மாளிகைக்குள் நுழைந்த போது, சிவகாமியின் கண்களில் தோன்றிய ஒளியும் அவளுடைய முகபாவமும் அவள் புத்த பிக்ஷுவைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் என்பதை உணர்த்தின.

நாகநந்தியும் சிவகாமியும் ஒருவர் முகத்தை ஒருவர் ஏறிட்டுப் பார்த்தார்கள். அவர்களுடைய கண்களின் தீக்ஷண்யம், ஒருவருடைய இருதய அந்தரங்கத்தை இன்னொருவர் ஊடுருவிப் பார்க்க முயன்றதாகத் தெரியப்படுத்தியது.

சற்று நேரம் அந்த மாளிகையில் மௌனம் குடிகொண்டிருந்தது. மௌனத்தைக் கலைத்துக் கொண்டு பிக்ஷுவின் தழுதழுத்த குரல், ''சிவகாமி! என்னை மன்னித்துவிடு!'' என்று கூறியது.

(தொடரும்)

**ஜோ**ஸ்வின் சில்வி·அந்த பார் மாஸ¬டிகல் கம்பெனியில் வேலைக்கு வந்து சேர்ந்த நாளிலிருந்தே டேவிட் மூருக்கு மனசு பரிதவித்தது. புத்தி தடுமாறிற்று. அந்த அளவுக்கு அவள் பார்க்க அழகாய், மிடுக்காய் இருந்தாள். அவளுடன் ஒப்பிடும் போது, டேவிட் மூர் ஒன்றும் அழகாக இருக்க மாட்டான். படிப்பும், பதவியும் மட்டுமே ஓரளவுக்கு உயர்ந்ததாக இருந்தன.

எனினும் அவளை எப்படியாவது காதலியாக அடைய வேண்டும் என்பது



அவனது தீராத ஆசையாக இருந்தது. நாட்கள் பல சென்றன. அவளுடன் பேச அவனுக்கு நிறைய சந்தர்ப்பங்கள் கிடைத்தனவே தவிர, தன் மனத்தில் இருந்த காதலை தைரியமாய் வெளிப்படுத்த முடியாமல் தயங்கினான். அவளாகவே சொல்ல மாட்டாளா என்று கூட எதிர்ப்பார்த்தான்.

**ப**ரிசோதனை அறையில் கம்ப்யூட்டரில் பதிவாகிக் கொண்டிருந்த விஷயங்களை மெமரியில் போட்டு நிறுத்தி விட்டு டேவிட் மூர் நிமிர்ந்தான். எதிரே ஜோஸ்வின் எதையோ சீரியஸாய் மைக்ரோஸ்கோப்பில் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளது கச்சிதமான இடையும், கன்னத்தோரம் சரிந்து விழுந்த கேசமும் அவனை மிகவும் கவர்ந்தன. அதற்குள் புரபசர் பிராட்மேனிடமிருந்து போன் வந்தது.

'க்வாலிடி அசெஸ்மெண்ட் முடிந்து விட்டதா?''

''முடிந்து விட்டது சார்.''

''பொட்டாஷியம் ரிபோர்ட் அனுப்பியாகிவிட்டதா?''

''ஜோஸ்வினைக் கேட்டால் தெரியும் சார்.''

''சரி அவளை ஒரு நிமிடம் பேசச் சொல்லுங்கள்.''

# ஜோஸ்வின் சிஸ்வியின் காதல்

''எஸ் சார்.''

அவளை அருகில் அழைக்க அவனுக்கு இப்போது ஒரு வாய்ப்புக் கிடைத்தது.

''ஜோஸ்வின்!'' என்று அழைத்ததும் அவளும் வந்தாள். ரிஸீவரை எடுத்துப் பேசினாள்.

டேவிட் மூர் சீரியஸாய் வேலை செய்வது போல பாவனை செய்தான். கண்ணாடி மேஜையில் தெரிந்த அவளது பிம்பத்தை ரகசியமாய் ரசித்தான். குரலும் இனிய நாதம் போல் இருந்தது.

''எஸ் சார்.''

''.........''

''ஷ்யூர்.''

''...........''

''தேங்க்யு சார்.''

ரிஸீவரை வைத்து விட்டுப் புன்னகையுடன் அவள் நகர்ந்ததும் உள்ளுக்குள் நினைத்துக் கொண்டான். 'டார்லிங்! உன் சிரிப்பைப் போல மயக்கம் தரும் மருந்து உலகில் வேறு எதுவும் இடையாது. உன்னை நான் மிகவும் நேசிக்கிறேன். ஆனால் நீ என்னை ஏற்றுக் கொள்வாயா? என் முகலட்சணமும், பர்சனாலிடியும் உனக்குப் பொருந்துமா? உன்னைக் காதலிக்கிறேன் என்று நேரிடையாகச் சொல்ல முடியவில்லையே. நீயாவது சொல்லி விடேன்.'



அந்த கம்பெனியில் அழகான இளைஞர்கள் பலபேர் வேலை பார்த்து வந்தனர். அவ்வப்போது வேலை விஷயமாக எதையோ விசாரிப்பது போல அவளிடம் பேச ஆரம்பித்து விடுவார்கள்.

அவனுக்கு அப்போதெல்லாம் எரிச்சலாக வரும். ஒரு மணி நேரத்திற்கு முன்பு கூட அப்படித்தான். பிராஸஸிங் யூனிட்டிலிருந்து ஸ்டீவ் ஹாட்லி அவளுடன் சுவாரஸ்யமாய்ப் பேசினான். அந்தப் பேச்சினால்தான் இப்போது இன்னும் ஸ்டாண்டர்ட் எஸ்டிமேஷன் அனுப்ப முடியாமல் தாமதம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

மதியம் இடைவேளைக்குப் பிறகு ஏதோ வேலையாய் அடுத்த செக்ஷனுக்குச் செல்ல வேண்டியிருந்தது. கடந்த வருடம் ஸ்டாக் ரிபோர்ட்டுக்காக ஒரு பைலை தேட ஆரம்பித்தான். அவன் வந்திருப்பது தெரியாமல் ஷெல்புக்குப் பின்னால் மறைவாய் உட்கார்ந்திருந்த ஹென்ரி டுகாகீஸும், டென்னி க்ரேயும் சீரியஸாய் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''ஒருத்தரை ஒருத்தர் காதலிப்பது என்பது சாதாரண விஷயம்தான்'' என்றான் டுகாகீஸ். ''ஆனால் காதலை வெளிப்படுத்தும் முறைதான் முக்கியமானது.''

''நீ சொல்வதை ஒப்புக் கொள்கிறேன். கண்ட இடத்தில் சந்தித்து 'உன்னைக் காதலிக்கிறேன்' என்றெல்லாம் சொல்லக்

மதுமனோ

கூடாது. அது வெறும் பேத்தலாகிவிடும். அந்த வார்த்தையைச் சொல்லும் இடம் அமைதியான பூங்காவாகவோ கடற்கரையாகவோ இருக்க வேண்டும். அதில்தான் உண்மையான ரொமான்ஸே இருக்கிறது.''

''நீ சொல்வதெல்லாம் ஒரு வேளை சினிமாவில் வேண்டுமானால் வரலாம். ஆனால் நிஜ வாழ்க்கைக்கு அது ஒத்து வராது. காதல் என்ற ஒன்று உதட்டளவில் மட்டுமின்றி மனசளவிலும் இருக்க வேண்டும். உண்மை உணர்வின் அடிப்படையில் அது மலர வேண்டும். அப்போதுதான் அது நிலைத்திருக்கும்.''

''ஆனால் அதற்கு நீண்ட காலம் பொறுத்திருக்க வேண்டுமே.''

''தேவையில்லை. நான் அதற்கு ஒரு டெக்னிக் சொல்லித் தருகிறேன். ஜீபா பெர்ரி பழம் கேள்விப்பட்டிருக்கிறாயா?''

''ம். செர்ரி பழ சைஸில் சிவப்பாய் இருக்குமே அதுதானே?''

''ஆமாம். அதன் மகிமைகளைச் சொன்னால் வியப்பாக இருக்கும். ஒரு பௌர்ணமி நாளாய்ப் பார்த்து சரியாக நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு நன்றாகச் சிவந்த பழங்கள் இரண்டினைப் பறிக்க வேண்டும். பறிக்கும்போது உன் காதலியை நினைக்க வேண்டும். மனம் உருக, 'கண்ணே உன்னை உயிருக்குயிராய்க் காதலிக்கிறேன். நீ எனக்கு வேண்டும். உன் அன்பு எனக்கு வேண்டும்!' என்று ஜபம் மாதிரி உள்ளுக்குள் ஐந்து நிமிடம் சொல்ல வேண்டும்''

டென்னி க்ரே கண்ணில் ஆச்சரியத்தைக் காட்டினான். ''நம்ப முடியவில்லையே! இப்படியெல்லாம் கூடவா நடக்கும்?''

''சந்தேகமாயிருந்தால் முயற்சி செய்து பார். நமது புராணங்களில் கூட இது சொல்லப்படுகிறது.''

எல்லாவற்றையும் கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்த டேவிட் மூர் சந்தடியின்றி அங்கிருந்து நகர்ந்து கொண்டான்.

இரவு பூராவும் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. ஒரே சிந்தனையாக இருந்தது.

'ஜீபா பெர்ரி பழத்தினால் சில்வின் எனக்குக் கிடைப்பாளா? அந்தப் பழத்தை எங்கு கண்டுபிடிப்பது? எங்கோ அதைப் பார்த்த மாதிரி இருக்கிறதே! ஆங்... செயின்ட் லூயிஸ் மெமோரியல் ஹால்!'

அன்றிலிருந்து நாட்களை கவனமாய்க் கணக்கு வைத்தான்.

பௌர்ணமி வந்தது.

இரவு பதினொன்று நாற்பத்தைந்துக்கு ஷெட்டுக்கு வந்து காரை எடுத்தான். பத்தே நிமிடத்தில் அந்த இடத்தை அடைந்தான்.

அது பனிக்காலம் என்பதால் ஏகமாய்ப் பனி பெய்து கொண்டிருந்தது. வானில் மேகங்கள் அப்பியிருந்ததால் நிலா வெளிச்சமும் சொற்பமாய் இருந்தது. காரை ஓர் ஓரமாய் நிறுத்தினான். மெமோரியல் ஹாலுக்குப் பின்னே இருந்த புதரை நோக்கிக் கவனமாய் நடந்தான். வழியில் ஏதேதோ ஜந்துக்களின் சலசலப்புக் கேட்டது. ஒரு வேளை பாம்பு ஏதேனும் கடித்து விடுமோ என்ற பயம் வேறு ஒரு பக்கம். ஓரிரு நிமிடத்தில் மெள்ள அந்தச் செடியை நெருங்கியிருப்பான். அதற்குள் யாரோ நடப்பது போன்ற காலடி ஓசை!

டேவிட் மூர் ஒரு பக்கமாய்ப் பதுங்கி நின்று கொண்டான். ஒரு சால்வை போர்த்திய உருவம் வேறொரு திசையிலிருந்து வந்து செடி அருகே நின்று கொண்டது. ஜீபா பெர்ரி பழங்களைப் பறித்தவாறு ஸ்லோகம் போல முணு முணுத்தது.

''நீ தான் என் உயிர். நீயே என் மூச்சு. உன்னை ஆழமாய் நேசிக்கிறேன். நீ எனக்கு வேண்டும். நீ இல்லாமல் எனக்கு வாழ்க்கையில்லை. கொடு. உன் மனத்தில் எனக்கு இடம் கொடு.''

நிமிடங்கள் ஓடின. அந்த உருவம் நகர்ந்தவழியாய் இல்லை என்பதால் டேவிட் மூர் பேசாமல் திரும்பி விட்டான்!

அடுத்த மாத பௌர்ணமிக்காகக் காத்திருந்தான். இந்த முறையும் அவனுக்கு ஏமாற்றமே மிஞ்சியது.

இப்படியே தொடர்ந்து ஐந்து மாதங்கள் ஏமாற்றத்தைத் தழுவினான்.



''கிலோவுக்கு மூன்று ரூபாய்தான் தர முடியும். சம்மதம்னா வாங்கிக்கறேன்!''

''எல்லாமே கஷ்டப்பட்டுக் காப்பியடித்து எழுதி அனுப்பித் திரும்பி வந்த கதைகள்ப்பா.. கொஞ்சம் அதிகமாப் போட்டுக் கொடு!''

- ஞா. ஞானமுத்து

அதன் பிறகு கதகதப்பான வெயில் காலம் வந்தது. ஜீபா பெர்ரி பழம் கிடைப்ப தென்பது அரிதாகிவிட்டது. டேவிட் மூருக்கு மனசில் கவலை, ஏக்கம் அத்தனை யும் பெருக்கெடுத்தன.

ஜோஸ்வின் சில்வி ஒரு இரசாயனப் பொருளின் சென்ஸிடிவ் டெஸ்ட் பண்ணிக் கொண்டிருந்தாள். அவளது செய்முறை டேவிட் மூர் சொல்லிக் கொடுத்த மாதி ரியே இருந்தது.

டேவிட் மூர் கம்ப்யூட்டர் டேட்டா வைக் கண்காணித்துக் கொண்டிருந்தான். அவனது கவனம் அடிக்கொரு முறை ஜோஸ்வின் மீது திசை திரும்பியது.

பாதி வேலை முடிய இருப்பதற்குள் இடை வேளை வந்தது. எழ இருந்தவன் இனியதொரு சுகந்தம் நாசியில் ஏற, கவனம் கலைந்தான்.

எதிரே ஜோஸ்வின் சில்வி பிரகாசமாய் நின்றிருந்தாள். அவளது ஹேர்ஸ்டைல் அவள் முகத்திற்கு எடுப்பாய் இருந்தது.

''நான் உங்களுக்குத் தொல்லை தரு கிறேனா?''

''இல்லை. ப்ளீஸ் உட்காருங்கள்.''

அவள் உட்கார்ந்து நிதானமாய் ஆரம் பித்தாள்.

''நான் உங்களுக்கொரு முக்கியமான விஷயத்தைச் சொல்லவே இங்கு வந்தேன். இத்தனை நாளாக என் மனசில் இருந்ததை இனியும் நான் பூட்டிவைக்க விரும்ப வில்லை.

''எஸ்.''

''நீங்கள் என் மீது இத்தனை கால மாய்க் காட்டும் அன்பையும் அரவணைப் பையும் நான் பெரிதும் மதிக்கிறேன். இந்த செக்ஷனில் மொத்தம் ஏழெட்டு இளை ஞர்கள் இருக்கிறார்கள். இவர்கள் வேலை யில் சிறிதும் பொறுப்பற்று, என்னைக் காதலிக்கத் துடியாய்த் துடிக்கிறார்கள். இது மட்டுமின்றி நான் அவர்களை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று மனசில் மூட நம்பிக்கையை வளர்த்துக் கொண்டு எனக்குத் தெரியாமல் ஜீபா பெர்ரி பழம் பறித்து வந்து பழரசத்தில் பிழிந்து கொடுக் கிறார்கள். இதை நான் அறவே வெறுக் கிறேன். என்னைப் பொறுத்தவரையில் இத்தனை அநாகரிகமான இளைஞர்களுக்கு மத்தியில், நீங்கள் மட்டும் உத்தமராக என் மனசுக்குப் படுகிறீர்கள். உங்கள் பண்புள்ள அடக்கமான செய்கை என்னைப் பெரிதும் கவர்கிறது. லெட்மி லே ஓப்பன்லி...... ஐ லவ் யு! லவ் யு ஸோ மச்!''

டேவிட் மூர் உறைந்து போய் உட் கார்ந்திருந்தான். திடீரென ஏற்பட்ட இன்ப அதிர்ச்சியில் மேனியெங்கும் சிலிர்த்து ஓடியது.

## மாதம் ஒரு நகரம்

# தஞ்சைக்கு வருகிறோம்



கல்கியின் 'மாதம் ஒரு நகரம்' என்ற திட்டத்தின் ஆறாவது நகரமாகத் தஞ்சை நகரத்தைத் தேர்ந்தெடுத்திருக் கிறோம்.

இம்மாதம் 28, 29, 30, 31 ஆகிய தேதிகளில் தஞ்சை நகரத்தில் தங்கி யிருந்து குறைகளையும் நிறைகளையும் அலசப் போகிறோம்.

எனவே, எங்களின் அலசலுக்கு உதவியாக, தஞ்சையிலுள்ள அனைவ ரும் தங்களூரிலுள்ள குறைகள், நிறை கள், அரசின் சாதனைகள், வேதனை கள், தனிமனிதச் சாதனையாளர்கள் மற்றும் இளைஞர் அமைப்புகளின் செயல்பாடுகள்..... என்று பல்வேறு கோணங்களிலும் சுருக்கமாக எங்க ளுக்கு எழுதியனுப்ப வேண்டுகிறோம்.

***தஞ்சைவாசிகளான உங்கள் கடிதங்கள் கல்கி அலுவலகத் திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 26.3.92.***

குறுகிய காலமே இருப்பதால் *'மாதம் ஒரு நகரம் - தஞ்சை'* என்று உறையின்மேல் குறிப்பிட்டு உடனடி யாக எழுதியனுப்புங்கள்.

- ஆசிரியர்

# டாலர் கலிலியோ

## 11



சங்கேத வார்த்தை சொல்லிச் சமிக்ஞை செய்த ஆசாமி வெடவெடவென்றிருந்தான்; ரௌடிக் கண்கள் அவன் முகத்தில் வீசியது. அவனை நெருங்கி உரசினாற்போல் நின்று கொண்டான் பிரகாஷ்.

''மெசேஜ் என்ன சொல்லு....''

''இன்னிக்கு நைட் ஏழு மணிக்கு மதுரை ஜங்ஷன் வந்தா மேலும் தகவல் கிடைக்குமாம்!''

''ஐ சி. பெட்டி எடுத்துக்கிட்டு வரணுமா?''

''வேணாம்னு சொல்லச் சொன்னாங்க'' என்றான் அமர்த்தலாக. ''அவ்வளவுதான் தகவல்.''

கிளம்ப முயன்றவனின் புஜத்தைத் 'கப்'பென்று பற்றி எஃகுத்தனமாய் இறுக்கினான் பிரகாஷ்.

''இஸ்ஸ்.... வலிக்குது. விடு சார். நான் போகணும்.''

அவன் திமிறி விடுபட முயன்றது பலிக்கவில்லை. பிரகாஷின் பிடி அவ்வளவு உறுதியாய் இருந்தது.

''முரண்டு பிடிக்காம கூட வா!''

''வர முடியாது. என்னய்யா செய்வே?'' என்றான் முறைத்தவாறு.

''மதுரை ஜனங்கள், கண் முன்னால ஒரு அநியாயம்னா கோபத்துல கொதிச்சிருவாங்கன்னு கேள்விப்பட்டிருக்கேன். அதனால - ''

அவன் விளங்காது விழித்தான்.

''நான் இப்போ 'திருடன்... திருடன்'னு உரக்கக் கூவப் போறேன்! நீ என்னை பிக்பாக்கட் செய்யறப்போ நான் உன்னைப் பிடிச்சுட்டேன்னு சொல்லப் போறேன். சுத்து வட்டாரத்துல என்ன ஒரு நெரிசல் பாரு.... அவ்வளவு பேரும் வந்து மொய்ச்சிருவாங்க. அப்புறம் உன் உடம்புல ஒரு எலும்பு கூடத் தேறாது....''

''வர்றேன்'' என்றான் ஈனஸ்வரத்தில்.

அறையை அடைந்ததும் வாசற் கதவைத் தாளிட்டான் பிரகாஷ்.

''உன் பேர் என்ன?''

''தனசேகர்'' என்றான் எச்சில் விழுங்கி.

அவனை மௌனமாக உற்றுப் பார்த்தான் பிரகாஷ். 'இடுதிப்'பென்று அவன் கன்னத்தில் ரப்பென்று அறைந்தான்.

'ஐயோ!' என்றான் தனசேகர் கதி கலங்கிப் போய்.

''டான் கலிலியோ யார்? அவன் எங்கிருக்கான்? சொல்லுடா நாயே!'' என்றான் உக்கிரமாகப் பார்த்தபடி.

''எனக்கு சத்தியமாத் தெரியாதுங்க. நீங்க சொல்ற பேரு கேள்விப்பட்டதில்லைங்க!''

பிரகாஷ் பட்டன் கத்தியின் பிளேடு விடுவித்தான். தனசேகரின் தோள் பற்றி முரட்டுத்தனமாக அவனை நெட்டித் தள்ளிக் கொண்டு போய்ச் சுவருடன் அழுந்த வைத்து, அசையவொட்டாமல் செய்தான். கூர்மையாகப் பளபளத்த கத்தியை அவன் தொண்டைக்கு அருகில் அபாயகரமாக நிறுத்தி, ''மடமடன்னு உண்மையைக் கக்கலைன்னா உன்னைக் கூசாமக் கூறு போட்டுருவேன். காணாம போனது என் மனைவிடா ராஸ்கல். ம்.... சொல்லு...''

தனசேகரின் கண்களில் அப்பட்டமாய்ப் பயம் தெரிந்தது; முகம் வியர்த்தது; குரல் குழறியது. சட்டென்று அவன் கழுத்திலிருந்து கத்தியை விலக்கினான் பிரகாஷ். 'சே! இந்தத் தொத்தல் லோக்கல் ரௌடியிடம் டான் பற்றி அறிய நினைத்தது மடத்தனம்.'

''சரி உன்னை யார்தான் அமர்த்தினது தனசேகர்?''

''தெரியாது சாரு! ஒரு ஆளு திடுதிப்புனு வந்தான். ஐநூறு ரூபா கொடுத்தான். உங்களைக் கை காண்பிச்சு, நான் சொல்ற மாதிரி சொல்றியான்னான். சுளுவான துட்டுன்னு ஒப்புக்கிட்டேன்.

**மா**லை 5:30. ஜங்ஷனில் அடுத்த சந்திப்பிற்கு நிறைய நேரம் இருந்தது. பட்டன் கத்தியைப் பத்திரப்படுத்தினான். பய விழிகளுடன் விடை பெற்றுக் கொண்ட தனசேகர் முகம், திரும்பவும் ஞாபகம் வந்தது. இவனுக்குள் ஆச்சரியம்... தூரிகையும் கையுமாக இருந்த நான் துப்பாக்கியும் கத்தியுமாக எப்படி மாறி விட்டேன்.... காதலின் சக்தி இப்படிக் கூட மாற்றுமா!

அறையில் அடைந்திருப்பது வெறுப்புத் தட்டவே கிளம்பினான்.

வீதிகளில் அலைந்தான். ஏகமாகப் புழுதி. நெருக்கியடித்த கடைகள். அதிவேகப் பாண்டியன்கள். சூடான சுவரொட்டிகள். நாளைய 'நம்பிக்கை' நட்சத்திரங்களுக்கும் நற்பணி மன்றங்கள்.. ஓ... மதுரை! சட்டென்று கண் இருட்டிக் கொண்டு அத்தனையும் காணாமல் போய் அவனுடைய எண்ணத் திரையில் -

ஒரு கோன் ஐஸ்க்ரீம் கடை. தங்க ஆடையில் சிந்துஜா. அருகே வெண்மை உடையில் பிரகாஷ்.

'என்னப்பா ஃப்ளேவர்?'

'பைனாப்பிள் மேடம்.'

'ஒண்ணு கொடு.'

'எனக்கில்லையா சிந்து?'

'உண்டுப்பா.' சிந்து புன்னகை செய்கிறாள். 'இனி எதுவும் ஒண்ணுதான் வாங்குவேன்!'

பிரகாஷ் விழிக்கிறான்.

'பாதியாகப் பகிர்ந்து கொள்ளுதல் இன்பம் பிரகாஷ்!'

பின்னால் ஹாரன் ஒலிக்க சுய உணர்வு பெற்று நடந்தான். ஒரு ஜவுளிக் கடையின் பல வண்ண டிஸ்ப்ளே பட்டுப் புடைவைகளை சிந்துஜாவிற்கு மானசீகமாக அணிவித்து மகிழ்ந்தான். இருக்கட்டும். பிற்பாடு இந்தக் கடையையே வாங்கி அவளுக்குப் பரிசளித்து விடுகிறேன்....

ஒரு ரெஸ்டாரெண்டிலிருந்து வெளி வந்த போது தன்னை ஒருவன் அணுகுவது கண்டு நின்றான்.

''என்னங்க கேகே நகரு எப்பிடிப் போவணுங்க?''

கையை அனாவசியமாக ஆட்டிக் கேட்டவனைப் பார்த்தான் பிரகாஷ். அவன் காதில் மங்கிய சிவப்புக்கல் கடுக்கன். பம்மலான பரட்டைத் தலை. அழுக்கேறிப் பழுப்பாகிய 'வெள்ளை' வேட்டி சட்டை. தோளில் கசங்கிய துண்டு. கையில் கித்தான் பை. கிராமம் என்பது புரிந்தது.

''தெரியாதுப்பா'' என்றான்.

''ஆமுங்க. பஸ்லத்தாங்க வந்தேன்!'' என்று மண்டையை ஆட்டினான். திக்கென்று விழித்தான் பிரகாஷ்.

''கேகே நகருக்கு வழி சொல்லுங்க.''

''நான் ஊருக்குப் புதுசப்பா. வேற யாருகிட்டயாவது விசாரிச்சுக்க.''

அந்தக் கிராமத்தானின் முகத்தில் சட்டென்று வருத்தம் படர, ''உங்களண்டை விலாசம்தானுங்களே விசாரிச்சேன்..... அதுக்குப் போய் ஏசறீங்களே....!''

**பத்மா ரவிசங்கர்**

பிரகாஷுக்குப் புரிந்துவிட்டது. தனக்குத் தெரியாதென்பதைச் சிரமத்துடன் அபிநயித்து அறிவித்துவிட்டு, அவனை அனுப்பியபின் அடக்க முடியாமல் சிரித்தான். ஒரு காது கேளாதவன்; அதுவும் அப்பாவி



''எதுக்கு ஸார் ஆபீஸுக்கு டேப் ரிகார்டரைத் தூக்கிட்டுப் போறீங்க?''

''இருமல் சத்தத்தை ஐந்து நிமிஷத்துக்கு ஒருதரம் ரிகார்ட் பண்ணியிருக்கேன். பக்கத்து ரூம்ல இருக்கிற மானேஜருக்கு நான் தூங்காம முழிச்சுக்கிட்டுத்தான் இருக்கேன்னு காட்டிக்கிடலாம் பாருங்க!''

- கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

கிராமத்தான்; இந்த மாநகரில் விலாசம் விசாரிக்கத் தன்னை நாடியது வேடிக்கைதான். சிரித்ததில் கண்கள் கசிந்தன. சிந்துவைப் பிரிந்ததிலிருந்து இன்றுதான் முதன் முறையாகச் சிரிக்கிறோம் என்றும் அவனுக்குப் பட்டது.....

ஜங்ஷன் நோக்கிக் கிளம்பினான். எதற்காக இரயில் நிலையத்திற்கு அழைக்கிறான்... டிரெயினுக்கு டிக்கட் எடுத்துக் கொடுத்து வேறு எங்கேனும் அனுப்புகிறானோ? எனில், எந்த ஊர்? எந்த இரயில்? பாதகர்களே, எங்கேயடா என் கண்மணியைச் சிறை வைத்திருக்கிறீர்கள்....?

அரற்றத் தொடங்கிய மனத்தை அதட்டி அடக்கினான். ஆபத்தான சமயம் இது. உணர்ச்சி வசப்படுதல் உதவாது; அறிவு மழுங்கலாகாது. எச்சரிக்கை தேவை. யோசித்து வைத்துள்ள பாதையில்தான் இம்மி பிசகாமல் பயணம்....

6:45. இரயில் நிலையம் அடைந்ததும் அங்கு அழைத்த காரணம் புரிந்தது. நிலையத்தில் காத்திருந்த வண்டிகள்; புரளும் பார்சல்கள்; தள்ளு வண்டி வியாபாரங்கள்; நெரிசல்; இரைச்சல்; அதை மீறி ஸ்பீக்கரில் பிளிறிய வயலின். களேபரமான ஜங்ஷனில் கரைவது சுலபம்.

''கழுகைக் காணும்!''

பின்னால் வெகு அருகில் குரல் ஒலித்தது. பிரகாஷ் உடனே திரும்பவில்லை. கைக்கடியாரத்தில் நேரம் பார்த்தான். துல்லியமாக 7:00. சுற்றிலும் நோட்டமிட்டான். ம்கூம். எவரும் கவனிக்கவில்லை. அங்கிருந்த ஆயிரம் அவசர முகங்களில் பிரகாஷும் ஒருவன்.... காஷுவலாகத் திரும்பினான்.

இவனைக் குறிப்பாகப் பார்த்தபடி ஒரு போர்ட்டர்; அல்லது போர்ட்டர் உடுப்பு அணிந்துள்ள மற்றொரு ரௌடி. 'விலகுது விபரீதம்' என்றான்.

அவன் சுற்று முற்றும் பார்த்துவிட்டுத் தன் சிவப்புச் சட்டைக்குள் கைவிட்டு ஒரு கவர் எடுத்துக் கொடுத்தான்.

அந்தக் கவர் ஒட்டப்பட்டிருந்தது. மேலே எதுவும் எழுதப்படாமலிருந்தது. இதனுள் என்ன இருக்கும்....

''கவரை இங்கே பிரிக்காதே. ரூமுக்குப் போய் பார்க்கச் சொன்னாங்க.''

சொல்லிவிட்டு வேகமாக விலகினான் அந்த போர்ட்டர் உடையாளன். பிரகாஷ் தயங்கினான். இவனுக்காவது ஏதும் தெரிந்திருக்குமா....? மாலையில் வந்தவன் போல்தான் இவனும்... என்றே தோன்றியது.

அறைக்குத் திரும்பியதும் ஆர்வமுடன் கவரைப் பிரித்தான். 'உன்னை அழைத்துச் செல்ல ஏர்போர்ட்டில் எங்கள் கார் காத்திருக்கும்' என்ற தட்டச்சுக் குறிப்புடன் இணைந்திருந்தது ஒரு விமான டிக்கட்! நாளை அவன் சென்னை செல்ல... பிரகாஷுக்குத் தலை சுற்றியது.....

மெல்ல மெல்ல விழிப்புக் கண்டது. சிரமப்பட்டு எழுந்து உட்கார்ந்து விழித்தான் பிரகாஷ். 'எங்கிருக்கிறோம்?' என்று குழம்பினான்.

மூலையில் முளைத்துள்ள கலர் டெலிவிஷன்; பச்சை கார்ப்பெட். விஸ்தாரமான வால்போஸ்டர் படம் அலங்கரித்த சுவர். நான் எப்படி இங்கு.... என்னாயிற்று எனக்கு... பாரமாக உணர்ந்த தலையைப் பிடித்தவாறு எழுந்து, இணைந்திருந்த பாத்ரூமிற்குத் தள்ளாடியவாறு சென்று, குழாய் திறந்து குளிர்ந்த நீரை முகத்தில் அடித்துக் கொண்டதும் தெளிவு பெற்றான். ஞாபகம் துல்லியமாகியது. நேற்று இரவு ஏர் டிக்கட் கிடைத்ததும் ஒரு டிராவல் ஏஜன்சியிடம் சென்னை சேர்ப்பிக்குமாறுத் தன் காரை ஒப்படைத்ததும், இன்று கிளம்பி விமானம் மூலம் சென்னை அடைந்ததும், விமான நிலையத்தில் காத்திருந்த டான் காரில் ஏறி அமர்ந்ததும் பின் சீட்டிலிருந்த ஒருவன் திடீரென்று தன் மூக்கில் கர்ச்சீப் வைத்து அழுத்தியதும் ஞாபகம் வர -

அந்தக் கைக் குட்டையை மயக்க மருந்தில் தோய்த்திருக்க வேண்டும். இப்படித்தானே அன்று அதிகாலையில் என் சிந்துவையும் மயக்கப்படுத்திச் சாய்த்திருப்பார்கள்... இருக்கட்டும். இவர்களை......

பற்களைக் கடித்தவாறு கட்டிலுக்கு வந்து அமர்ந்ததும் திடுக்கிட்டான். திடுதிப்பென்று ஒளிரத் துவங்கிய அறை மூலை டி.வியில் ஒரு சிங்கம் தோன்றி கம்பீரமாக உலவியது. பிரகாஷ் உறைந்தபடி பார்த்

தான். சிங்கம் திரும்பியது. தன் முகம் டைட் க்ளோசப்பில் வந்ததும் கர்ஜித்து விட்டுச் சடுதியில் மறைந்தது.

இரண்டு வினாடிகள் கழித்து மறுபடி உயிர் பெற்ற டீவி திரையில் டான் கலிலியோ!

போலீஸாரைப் பல காலமாகத் திணற வைத்த - 'மாயாவி', 'கில்லாடி' என்றெல் லாம் தினசரிகளால் விவரிக்கப்பட்ட - எவர் கண்களுக்குமே புலப்படாத அண்டர் கிரெளண்டு கிரிமினல் டான் தற்போது எதிரில்... எதிரில்.... பிரகாஷ் இமைக்க மறந்து கவனித்தான்.

''வெல்கம் பிரகாஷ்!'' டான் குரல் கர கரவென்றிருந்தது.

''உன்னுடைய இரண்டாவது தவ ணைக்கு நன்றி. ஆனா பாரு என்னை ஏமாத்தப் பார்க்கறே. கேட்ட தொகை இல்லே. என் பணமுடை லேசுல தீராது போல!'' டானுக்குப் பரட்டையான சிவப் புத் தலைமுடி - அவன் காதையும் நெற்றி யையும் மறைத்தபடி.

''உன் டாடி ராஜசேகர் கிட்ட செமத்தி யான செல்வம்னு தகவல்.'' கலிலியோ வின் கண்களில் நீலநிற காண்டாக்ட் லென்ஸ்.

''ஒரே தவணைல பெருத்த பணமா வசூல் செய்துறலாம்னு திட்டம்'' கம்பளிப் பூச்சிகளாய்ப் புருவங்கள்.

''அதற்கு சிந்துஜாவோட உன்னையும் சேர்த்துப் பிடித்தால்தான் வசதி'' செம் பட்டை நிறத்தில் புஸ்தி மீசை, புசுபுசு தாடி.

''ராஜசேகரின் ஒரே ஆசை வாரிசு நீ -'' மெரூன் வண்ண முழுக்கை சட்டை - அதில் பொன்னிற சிங்க முகம் எம்பி ராய்டரியாக.

''பதறிக்கிட்டுப் பணத்தோட வர மாட் டாரா....'' காண்பவை யாவும் தன் உரு வத்தை மறைத்து - அல்லது மாற்றிக் கொள்ள டான் எடுத்துள்ள பிரத்யேக முயற்சிகள் என்பது புரிந்தது.

பின்னே, சுய உருவையா அந்நிய னான, எதிரியான தன்னிடம் காட்டுவான்?

''ஆங்! மறந்துட்டேனே... உன் சம்சா ரத்தைப் பார்க்கணும்னு துடிச்சுகிட் டிருப்பே! ஆரோக்யமாத்தான் இருக்கா. இப்ப டீவில பார்க்கிறியா?''

இதயம் படபடக்கக் கட்டிலின் முனைக்கு வந்து விட்டான்.

''ரிலாக்ஸ் பிரதர். கட்டில்ல நல்லா சாஞ்சுகிட்டே பார்க்கலாம் என்ன....''

உஷார் பிரகாஷ். டானால் உன்னைக் கவனிக்க முடிகிறது. ஸோ, இந்த அறை யில் ஒரு காமெரா லென்ஸ் இருக்கிறது.....

டீவியில் மொத்தம் இரண்டு காட்சி கள்: ஒன்றில் இதே போன்ற ஒரு அறை யில் சிந்துஜா உறங்கியபடி; இரண்டா வதில் சோகமாக எங்கோ வெறித்தபடி. பார்த்துக் கொண்டிருந்த பிரகாஷ் முகம் க்ரானைட்டாய் இறுகி இருக்க, அவன் தாடையில் ஒற்றை நரம்பு துடித்தது.

திரும்பவும் திரையில் வந்த டான், ''நல்ல பிள்ளையா நடந்துக்க. சிந்துஜா நலமா இருப்பா. தப்பிக்கணும்னு அசட்டுத் தனமாத் திட்டம் ஏதும் போடாதே. உன் னால முடியாது. நீ என் மாஸ்டர் பிளா னோட துருப்புச் சீட்டுப்பா. உன்னைப் பாதுகாக்க பக்காவான ஏற்பாடு செய்திருக் கேன்.... இந்நேரம் போலீஸ் உன்னைத் தேடி அலைஞ்சிக்கிட்டிருக்கும். ஆனா போலீஸால உன்னை நான் சிறை வைத் திருக்கும் இடத்தை நிச்சயமாக் கண்டு பிடிக்க முடியாது. குட்டே பிரகாஷ்!''

அணைந்து போன டீவியை வெறித்த படி உட்கார்ந்திருந்தான்.

டான் கலிலியோவின் முன் யோச னையில் வியந்தான். சூழ்ந்துள்ள ஆபத்து மலைக்க வைத்தது. எப்படி டான் கும்பலை எதிர்த்துச் சமாளிப்பது? எப் படி சிந்துவை மீட்பது? அப்புறம் எப் படித் தப்பிப்பது?

டிஜிடல் கைக் கடிகாரம் திங்கள் மாலை 6:00 என்று அறிவித்தது.

அப்போது அறை வாசற் கதவு வெளித் தாழ்ப்பாள் நீக்கப்படும் ஓசை கேட்டது! பரபரப்பாக உணர்ந்தான் பிரகாஷ்.......

(தொடரும்)

''பணம் சம்பாதிக்கிறதிலே அந்த அரசியல்வாதி எல்லாரையும் தூக்கிச் சாப்பிட்டுட்டாரு!''

''என்ன சொல்றீங்க?''

''பிளேன்ல கண்டக்டர் வேலை வாங்கித் தர்றேன்னு ஒருத்தர்கிட்டே ஐம்ப தாயிரம் ரூபாய் வாங்கியிருக் கார்!''

- எஸ். முகம்மது யூசுப்



# பொற்கிழி

**சத்யா ஸ்ரீனிவாசன்**

மனத்திற்குள் மகிழ்ச்சியும் பெருமிதமும் பிரவாகமாகப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தாலும், அதைச் சற்றும் வெளிக்காட்டிக் கொள்ளாமல், சிறு புன்னகையுடன் அமைதியாக அடக்கவொடுக்கமாக மேடையில் அமர்ந்திருந்தார் வெங்கடாசலம். 'தியாகி' வெங்கடாசலம்! வண்ண வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட மேடையும், மைக் செட்டுகளும், நகரமெங்கும் ஒட்டப்பட்டிருந்த போஸ்டர்களும் அவர் காணாதவையல்ல. ஆயிரக்கணக்கான முறை கண்டவர்தான். ஆனால் அப்போதைக்கும், இப்போதைக்கும் ஒரு சிறு வித்தியாசம். அப்பொழுதெல்லாம், அவர் சாதாரணத் தொண்டர். இரவு முழுவதும் அலைந்து திரிந்து போஸ்டர் ஒட்டி விட்டு, விழா நேரத்தில் மேடைக்கு எதிரே தரையில் சப்பணமிட்டு அமர்ந்து, தலைவர்களின் சொற்பொழிவை பக்திப் பரவசத்துடன் கேட்டவர். ஆனால் இன்று அவர் தான் விழா நாயகன். ஆம். அவருக்கு பாராட்டு விழா நடத்தி, பொன்னாடை போர்த்தி, பொற்கிழி அளிக்க ஏற்பாடு செய்திருந்தது பிரபல அரசியல் கட்சியான க.க.க.

ஒரு வாரத்திற்கு முன்பு க.க.க. வின் நகரப் பிரமுகர் ஒருவர் வெங்கடாசலத்தை அணுகி, அவருக்குப் பாராட்டு விழா நடத்தத் தங்கள் கட்சி விரும்புவதாகத் தெரிவித்த போது, வெங்கடாசலத்துக்கு என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை. நயமாக மறுத்தார்.

''இப்படி ஊரைக் கூட்டி பாராட்டு விழா நடத்த வேண்டிய அவசியமே இல்லைங்க. நா ஒரு சாதாரணத் தொண்டன். ஏதோ என்னாலே முடிஞ்ச சேவை பண்ணியிருக்கேன். அவ்வளவுதான். எனக்கு எதுக்குங்க விழா, அது இதுன்னு?'' என்று மறுத்துப் பார்த்தார்.

ஆனால் வந்திருந்த பிரமுகர், ''அப்படியில்லீங்க. உங்க சேவையைப் பாராட்டி, தலைவர் கையாலே பொன்னாடை போர்த்தி... ஏதோ எங்களாலான ஒரு தொகையை உங்களுக்குப் பொற்கிழியாகத் தரலாம்ன்னு இருக்கோம். நீங்க மறுக்காம ஒத்துக்கணும்'' என்று மீண்டும் சொல்லவே, வெங்கடாசலத்தின் மனைவிக்கு ஒரு நப்பாசை.

சுதந்திரப் போராட்டத்தின்போதே, போலீஸ் தடியடி பட்டு, ஐந்து ஆண்டுகள் சிறையில் இருந்து, தேச சேவை செய்தவர் அவர். சுதந்திரத்திற்குப் பிறகும் அரசியலில் ஆர்வம் காட்டி, அவர்கள் காட்டிய வழியில் நடந்து, எதிர்ப்பட்ட துன்பங்களையும் இன்முகத்துடன் எதிர்கொண்டவர். தம்முடைய அதீதமான அரசியல் ஈடுபாடு காரணமாக அவரால் தன் குடும்ப நலனைக் கவனிக்க முடியாமற் போய் விட்டது. விளைவு முதுமையில் வறுமை. ஆகவே அந்தக் கட்சிப் பிரமுகர் 'பொற்கிழி' என்றதும் சபலம் ஏற்பட்டது அவர் மனைவிக்கு. வெங்கடாசலமும் விழாவிற்கு ஒப்புக் கொண்டார்.

வெங்கடாசலத்தின் மனைவி கனவுலகில் மிதக்க ஆரம்பித்து விட்டிருந்தாள். 'பெரிய அரசியல் கட்சியினர் நடத்தும் விழா. அவர்கள் நன்கொடை அளிப்பது என்றால் குறைந்த பட்சம் இருபதாயிரமாவது தேறாதா? என்று எண்ணியவள், முதலில் இந்தப் பழங்கால வீட்டைக் கொஞ்சம் சரிசெய்ய வேண்டும்' சுவரில் ஆங்காங்கே காரை பெயர்ந்து, மேலே பல இடங்களில் ஓடுகள் உடைந்து, தரை முழுவதும் குண்டும் குழியுமாக, குட்டிச்சுவராகத்தான் காட்சியளித்துக் கொண்டிருந்தது வீடு. வீட்டு ரிப்பேருக்காகப் பத்தாயிரம் ரூபாயை ஒதுக்கி வைத்தாள், அவர் மனைவி. அடுத்து பெண்ணின் கல்யாணச் செலவுக்கு. குறைந்தது இரண்டு பவுன் நகைகள், நல்லதாக இரண்டு மூன்று புடைவைகள் என்று எடுத்து வைத்தால் பின்னால் உபயோகமாக இருக்குமே என்று எடை போட்டது அவள் தாய் மனம். வெங்கடாசலத்தின் உள்ளத்திலும் அப்படியெல்லாம் ஆசைகள் அரும்பத் துவங்கியிருந்தன.

விழா மேடையிலும், எதிரே வந்து அமர்ந்திருந்த மக்கள் மீதும் பார்வையை ஓட விட்டார் வெங்கடாசலம்.

அவருக்கு இடப்புறம், அந்தக் காலத்து ராஜாக்கள் பயன்படுத்திய சிம்மாசனம் போன்றதொரு அலங்கார இருக்கை தலைவருக்காகப் போடப்பட்டிருந்தது. அந்த ஆடம்பர இருக்கையின் முன் வெங்கடாசலமும் மற்றவர்களும் அமரப் போடப்பட்டிருந்த நாற்காலிகள், மிக மிகச் சிறியவையாகத் தோன்றின.

கூட்டத்தில் சலசலப்பு.

''தலைவர் வாழ்க!''

''அண்ணன் வாழ்க!''

''தியாகிக்கு வி ழா க் காண வரும் தியாகச் செம்மல் வாழ்க!''

என்ற பலமான கோஷங்களுக்கிடையே மேடையேறிய 'தலைவர்' யாரும் எதிர்பார்க்காத காரியம் ஒன்று செய்தார். மளமளவென மேடை ஏறியவர், நேரே வெங்கடாசலத்தின் முன்னால் குனிந்து அவர் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டார். அதிர்ந்து போனார் வெங்கடாசலம்.

''என்னங்க . இது! நா சாதாரண மனுஷன். நீங்க எவ்வளவு பெரிய கட்சியின் தலைவர். நீங்க போயி என் காலைத் தொ ட ற து வது...'' என்று சங்கடப்பட, சுற்றியிருந்த பத்திரி கை யா ள ர் களையும், புகைப் ப ட க் கா ர ர் களையும் பார்த்துப் புன்னகை செய்த தலைவர் -



''எவ்வளவு அடக்கம் பார்த்தீங்களா? இதுதான் பண்பாடு. இதுதான் பெரிய மனிதத்தனம். இதுக்காகவே இவர் கால்லே எவ்வளவு தரம் வேணும்னாலும் விழலாம்'' என்றவாறே மீண்டும் வெங்கடாசலத்தின் முன்னால் குனிய, காமிராக்கள் பளிச்சிட்டன. ஒன்றும் பேச முடியாமல் அதிர்ந்து நின்றார் வெங்கடாசலம்.

அடுத்து, தன் தொண்டர்களிடம் சத்தம் போடத் துவங்கினார் தலைவர். ''என்யா, உங்களுக்கெல்லாம் அறிவிருக்கா? இவ்வளவு பெரிய மனுஷனை சாதாரண சேர்லே உட்கார ஏற்பாடு பண்ணிட்டு, எனக்கு மட்டும் என்யா அந்த பெரிய சேர்? அவரு முன்னாலே அதுலே உக்கார எனக்கு என்னய்யா தகுதி இருக்கு? அவரு அதுலே உக்காரட்டும். நா கீழே உக்கார்றேன். அதுதான் நியாயம்...'' என்று சொல்ல, மீண்டும் அதிர்ந்து போன வெங்கடாசலம், ''ஐயய்யோ, அதெல்லாம் தப்புங்க தலைவரே. நீங்கதான் அங்கே உக்காரணும். அதுதான் சரி'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ள, தம் இருக்கையில் அமர்ந்து, 'ஜம்'மென்று கால் மேல் கால் போட்டுக் கொண்டார் தலைவர்.

**வி**ழா துவங்கியது.

நகரமன்றச் செயலாளர் ஆரம்பித்தார்.

''அண்ணனுக்கு ஆ யி ர ம் வேலைகள். மூச்சுவிடக் கூட நேரம் இருப்பதில்லை. ஆயிற்று... அடுத்த மாதம் தேர்தல்கள் வேறு வர உள்ளன. முழுமூச்சாக உழைக்க வேண்டிய நேரம். அவ்வளவு அலுவல்களுக்கிடையேயும் 'தி யா கி வெங்கடாசலத்துக்குப் பாராட்டு விழா நடத்த ஏற்பாடு செய்துள்ளோம். நீங்கள் வந்து கலந்து கொள்ள வேண்டும்' என்று சொன்னதும் மறுபேச்சின்றித் தம் மற்ற பணிகளை ஒதுக்கி வைத்து விட்டு, இங்கே வரச் சம்மதம் அளித்தார் தலைவர். அது அவர் பெருந்தன்மையைக் காட்டுகிறது. தியாகி வெங்கடாசலத்தின் பெருமையையும் காட்டுகிறது...'' என்று பேசி விட்டு அமர்ந்தார்.

அடுத்தவர், ''நா கூட பயந்தேனுங்க, என்னடா இது, பாராட்டு





# தேடல்

101 ஆரம்பி

102 கம்ப்யூட்டரே நீ யார்? தேடு.

103 வீடு சுத்தமாக்கிடுவேன்
துணிமணிகள் துவைத்திடுவேன்
காலையிலே எழுப்பிடுவேன்
எங்கேஜ்மெண்ட் எடுத்துரைப்பேன்
கற்ற வித்தை காட்டவந்த
நான் உன் சேவகன்

104 இல்லையெனில் 105க்குப் போ.

105 மானிட்டர் திரையினிலே
எனது நெஞ்சினலைகளடா
உந்தன் மனமறிய நாளும்
டேப் யூனிட்டில் தேடுகிறேன்
மூத்தவர் சம்மதியில்
மைக்ரோ குட்டிகள்
பின்னர் செய்வோம்
காத்திருக்காமல் தா
கன்னத்தில் முத்தமொன்று!
நான் உன் காதலி.

106 இல்லையெனில் 107க்குப் போ

107 பால் வாங்கிப் பதப்படுத்தி
பாங்காய்க் கொடுத்திடுவேன்
உன் விருப்பம் உன்பருவம் இணங்க
விந்தை விந்தையாகத் தோற்றங்கள்
கதைகள் வீடியோ விளையாட்டுகள்
ஆடாமல் ஓடாமல்
விண்ணுலக யுத்தத்தைத்
திரையினிலே நிகழ்த்திடுவேன்
நான் உன் தாய்.

108 இல்லை யெனில் 109க்குப் போ



109 சிந்திக்கும் திறனின்றி
உன்துணை கொண்டு
உன்னுடை முயற்சியால்
உன்னுடை பழகலால்
உன்மொழி கேட்பதால்
நான் உன் சீடனன்றோ?

110 இல்லையெனில் 111க்குப் போ

111 1 +1 = 2 என்றுனக்குப்
புரியாத பாடம் சொல்வேன்
ஆப்பிள் முதல் இன்சாட்வரை
பாங்காய் வடிவமைப்பேன்
சர்க்காரியா முதல் மாஃபியா வரை
உளவில் உதவுவேன்
நான் உன் சற்குரு.

112 இல்லையெனில் 113க்குப் போ

113 ஆயிரம் பேர் வேலை ½ விநாடியில்
பார்த்த விடத்திலெல்லாம்
பார்த்தீனிய விரவல்
மானிடர் வேலையெல்லாம்
கபளீகர விழுங்கல்
வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு
உலகமெல்லாம் வித்து
ICMB-க்கள் ஸ்கட்கள்
விரல் நுனிபட்டன் முத்தத்தில்
உலகமே நாகசாகி
நான் உன் யமன்.

114 ஆம் என்றால் 115க்குப் போ

115 நிறுத்து அச்சடி

116 கம்ப்யூட்டர் மனிதகுலத்தின் யமன்.

- நளினி சாஸ்திரி

விழான்னு பெரிசா ஆரம்பிச்சுட்டோமே; பணம் வசூலாகுமா, என்ன பண்ற துன்னு... ஆனா, வசூல் செய்யக் கிளம்பின உடனே, என் பயம் விட்டுப் போச்சுங்க. 'தியாகி வெங்கடாசலம்' அவர்களின் பெயரைச் சொன்ன உடனேயே தயங்காமல் எல்லோரும் நன்கொடை கொடுக்கத் தயாராக இருந்தார்கள். அதுவும் அண்ணன் அவர்கள் விழாவில் கலந்து கொள்கிறார் என்றதும் நூறு இருநூறு எனக் குவிய ஆரம்பித்து விட்டது. அசந்து போய் விட்டேன். கணக்கு விஷயத்தில் அண்ணன் ரொம்பவும் கறார் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆகவே வசூல் தொகையை இங்கேயே அறிவிக்கிறேன். மொத்தமாக ஐம்பதாயிரம் வசூலாகியுள்ளது. அண்ணன் அவர்கள் தன் பொன்னான கைகளால் இத் தொகையை தியாகி வெங்கடாசலம் அவர்களுக்கு அளிப்பார்'' என்று அறிவிக்க, கரகோஷம் வானைப் பிளந்தது.

''ஐம்பதாயிரம்!'' தியாகிக்கு மூச்சே ஒரு நிமிடம் நின்று, பிறகு வந்தது.

கூட்டத்தில் அமர்ந்திருந்த அவர் மனைவிக்கோ, மயக்கமே வந்து விட்டது. தன் இரு கரங்களையும் தலைக்கு மேலே தூக்கித் தலைவரையும், அறிவிப்பாளரையும் வணங்கினாள் அந்தப் பெண்மணி.

தலைவர் பேச ஆரம்பித்தார்.

''மிக முக்கியமான பணிகள் பல இருந்தும், நான் இங்கே வந்துள்ளேன் என்று எனக்கு முன் பேசியவர்கள் சொன்னார்கள். உண்மைதான். ஆனால் என்னைப் பொறுத்தவரை, நான் சார்ந்துள்ள கட்சியைப் பொறுத்தவரை, மற்ற பணிகளை விட, இதுபோன்ற விழாக்களில் கலந்து கொள்வதைத்தான் முக்கியமானதாக - எங்களுக்கு பெருமை அளிப்பதாக நினைக்கிறோம். என் கையால் பரிசைப் பெறுவது அவருக்குப் பெருமையல்ல. அது அவர் பெருந்தன்மை. ஆனால் எனக்குப் பெருமை. அவர் இன்னும் பல்லாண்டுகள் வாழ வேண்டும் என வாழ்த்தி, அவர் சேவைக்கு, அவர் செய்த தியாகங்களுக்குத் தலைவணங்கி, உங்கள் சார்பாக, அவருக்குப் பொன்னாடை போர்த்தி, இப் பொற்கிழியை அளிப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்'' என்றபடி வெங்கடாசலத்துக்குப் பொன்னாடை போர்த்த, முதுகை நன்றாக வளைத்து, முழுவதுமாகக் குனிந்து அதை ஏற்றுக் கொண்டார் வெங்கடாசலம். அடுத்து அவர் கையில் அளிக்கப்பட்ட, பட்டுப் பை அவரை லேசாகத் திடுக்கிட வைத்தது.

மிகச் சிறிய பை அது. அதிலிருந்த பணம் ரூபாய் ஆயிரத்துக்கு மேல் இருக்காது என்று தோன்றியது அவருக்கு. அவர் முகத்தில் ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட விழா அமைப்பாளர், ''மீதியை வீட்லே கொண்டாந்து கொடுப்பாங்க'' என்று வெங்கடாசலத்தின் செவிகளில் கிசுகிசுக்க, அமைதியானார் வெங்கடாசலம்.

விழா முடிந்து வீட்டையடைந்த வெங்கடாசலம் தம்பதியினருக்கு இருப்புக் கொள்ளவில்லை. விழா மேடையில் அவருக்கு அளிக்கப்பட்ட பட்டுப் பையில் ஆயிரத்தொரு ரூபாய் மட்டுமே இருந்தன. மீதியை விழா அமைப்பாளர் கொண்டு வருவார் எனக் காத்திருந்தனர். இரவு வெகு நேரமாகியும் அவர் வராமல் போகவே, 'அவர் நாளை காலையில் வருவார்' என்று தங்களைத் தாங்களே சமாதானப்படுத்திக் கொண்டு உறங்கினர்.

அவர்களை வெகுநேரம் காக்க வைத்து விட்டு, மறுநாள் மாலை ஆறு மணி சுமாருக்கு வந்து சேர்ந்தார் விழா அமைப்பாளர்.

''அப்பப்பா. ஒரே பேஜார் போங்க. விழா நடத்தறதுன்னா எவ்ளோ கஷ்டமான சமாசாரம்... அடேயப்பா'' என்று பேச ஆரம்பித்தார் அவர்.

''தலைவருக்கு ப்ளேன் டிக்கெட் பர்ஸ்ட் கிளாஸுக்கு எடுத்தாச்சு. அவரோட பி. ஏ., சம்சாரம், பசங்க இவங்களுக்கு 'எகனாமி' க்ளாஸ்ல டிக்கெட் கிடைக்கலே. அதனாலே அவுங்களுக்கும் பர்ஸ்ட் கிளாஸ் டிக்கெட் எடுக்க வேண்டி வந்துடுச்சு. அது மட்டும் பத்தாயிரம் ரூபாய் ஆயிடுச்சு'' என்றவர், ''அப்புறம் தலைவருக்கு ஏ. ஸி. கார்; அவரோட சம்சாரம், அவங்க அம்மா வீட்டுக்குப் போகணும்ன்னு சொன்னாங்க. அவங்களுக்கு ஒரு ஏ.ஸி. கார். அவரோட பி.ஏ.க்கு ஒரு சாதாரண கார். இப்படி எவ்வளவு செலவு. தலைவர் தங்கின ஹோட்டல் பில்லே எவ்வளவு ஆயிடுச்சு தெரியுமா? அப்புறம் போஸ்டர், விழா மேடை, மைக் செட், 'லைட்'டுன்னு ஒரே செலவுதான் போங்க. எதுக்கெடுத்தாலும் ஆயிரக் கணக்குலேதான் செலவு... பாவம், எங்க கஷ்டத்தையெல்லாம் ஏன் உங்ககிட்டே சொல்லணும்? உங்க கணக்கைச் சொல்லிடறேன்...'' என்று அவர் விஷயத்துக்கு வந்ததும் கறுகறுப்பானார்கள் வெங்கடாசலமும் அவர் மனைவியும்.

''இதோ பாருங்க. மொத்த கலெக்ஷன் நாப்பத்தேழாயிரம்தான். ரவுண்டா இருக்கட்டுமேன்னு ஐம்பதாயிரம்ன்னு சொன்னோம். அதுலே நான் சொன்ன செலவெல்லாம் போக மீதி ஆயிரத்து ஐந்நூறு தான். நேத்தே தலைவரு ஆயிரத்தொரு ரூபாய் கொடுத்துட்டாரு. இந்தாங்க மீதி ஐந்நூறு ரூபா'' என்றபடி ரூபாயை நீட்டினார் அவர்.

# அதிரடி அல்ல; அடாவடி!

## 'அடாவடி' மாற்றங்கள்!

◆ 'அமைச்சரவையில் அதிரடி மாற்றங்கள்' கட்டுரை படித்தேன். அதிரடி என்பதற்குப் பதில் 'அடாவடி' என்று குறிப்பிட்டிருக்க வேண்டும். காரணமற்ற நடவடிக்கையை அப்படித்தானே சொல்ல வேண்டும்!

தரிப்பாளையம்,
அ. கிருஷ்ணமூர்த்தி.

## வெல்டன்!

◆ 'நான்தானே எழுதறேன்' - சிரிப்பையும், வேதனையையும் ஒருசேர வரவழைத்த அற்புதமான கார்ட்டூன். ஐ. எம். எஃப் மற்றும் உலக வங்கியின் பிடியில் இந்தியப் பொருளாதாரம் சிக்கிக் கொண்டு பரிதவிக்கும் நிலை பற்றி, பத்தி பத்தியாக எழுதினாலும் விவரிக்க முடியாத உண்மைகளை, மிக எளிமையாக மனத்தில் பதிய வைத்து விட்டீர்கள். வெல்டன்!

கும்பகோணம், எஸ். மங்களம்.

## உரிமைக் குரல்!

◆ 'ஜிகுஜிகு ரயிலும் திகுதிகு நெஞ்சமும்!' தலையங்கத்தின் ஒவ்வொரு வரியும், நடுத்தர - ஏழை வர்க்கத்தின் உரிமைக் குரலாக ஒலிக்கிறது.

பாப்பனப்பட்டு,
வி. பவுனுப்ரியா.

## உணர்ந்து எழுதிய தலையங்கம்

◆ தலையங்கம் மக்களின் மனவேதனையை உணர்ந்து எழுதப்பட்டுள்ளது.

மேல்பட்டி, எல். மாறன்.

## சுவையும் பாராட்டும்!

◆ 'சாக்லேட்' பற்றிய தகவல்கள் மிகவும் சுவையாக இருந்தன! 'சாக்லேட்டால் ஆரோக்கியம் பாதிக்கப்படுமா?' என்று டாக்டரின் ஆலோசனையையும் கேட்டு வெளியிட்டது பாராட்டுக்குரியது...!

மேட்டூர் அணை,
ஆர். கருணாகரன்.

## தொடர்ந்து வருமா?

◆ 'டிப்ஸ் டிப்ஸ்' பகுதியைத் தவறாது எடுத்துப் பத்திரமாய்ச் சேர்த்து வைத்துள்ளேன். அப்பகுதியைத் தொடர்ந்து பிரசுரித்தால் என்போன்ற பல வாசகர்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும் என நினைக்கிறேன்.

ஸ்ரீரங்கம், ஆர். வேதவல்லி.

## தெற்குக்கும் திறமையுண்டு!

◆ தொலைக்காட்சியில் 'வடக்கே தயாரிக்கப்படும் தொடர்களுக்கு, சற்றும் தரத்தில் குறைந்ததில்லை தெற்கே தயாரிக்கப்படும் தொடர்கள்' என்று நிரூபிக்கும் குட்டி பத்மினி பாராட்டப்பட வேண்டியவர்!

தஞ்சாவூர், முத்து சரவணன்.

## ரொம்ப திருப்தி!

◆ அகிலா கார்த்திகேயனின் ''அருணாசலத்தின் அச்சம்'' சிறுகதை முறுகலான மசாலா தோசை சாப்பிட்ட திருப்தியைத் தந்தது.

கடையல், அன்பின் செபா.

## அற்புதமான கட்டுரை!

◆ இளம் தளிர்களின் பிஞ்சு மூளைகளில் அத்தனை விஷயங்களையும் திணித்து விட வேண்டும் என்ற பேராசையில் இருக்கும் பெற்றோர்களால், அந்தச் சின்னக் குஞ்சுகளின் நெஞ்சில் ஏற்படும் பயம், சங்கடம், வெறுப்பு - அதனால் குழந்தைகளுக்கு ஏற்படும் வியாதிகள் பற்றி அருமையாக விளக்கப்பட்டிருந்த கட்டுரை, 'பிஞ்சுக் குழந்தைகளை வதைக்கும் பள்ளிகள்'.

திருப்பரங்குன்றம்,
டி. கே. சுப்பிரமணியன்.

## பங்க் ஸ்டைல்!

◆ ''டேய், சலூனுக்குப் போய் முடிவெட்டிக்கறேன்னு சொல்லிட்டுத் தலையிலே கொண்டை போட்டது மாதிரி முடிவெட்டிக்கிட்டு வந்து நிக்கிறியே?''

''அம்மா, இதுக்குப் பேரு பங்க் ஸ்டைல். இந்த வார கல்கியில் கூட போட்டிருக்காங்க... நீங்க பார்க்கலையா?''

திருவட்டார், தா. சித்துகுமார்.

## உண்மையை விளக்கியது!

◆ 'வத்சலாவின் வேதனைகள்' சிறுகதை, நியாயமான உதவிகள், விழலுக்கிறைத்த நீராய் வீணாகி விடக் கூடாதென்ற உண்மையை, அற்புதமாய் வலியுறுத்தியது!

வேலாயுதம்பாளையம்,
எம். சம்பத்.

## சிறு திருத்தம்

◆ கல்கி 19.1.92 இதழில் வாசகர்களுக்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்ததற்கு என் மகிழ்ச்சி கலந்த நன்றி. அறிமுக வாசகங்களில் ஒரு சிறு திருத்தம். நான் அமெரிக்காவில் டாக்டராகத் தொழில் நடத்துபவனல்ல. வேதியியலில் பிஎச்.டி. பட்டம் பெற்ற நான், கல்லூரியில் பேராசிரியராக இருக்கிறேன்.

பால்டிமூர்,
வாஷிங்டன் ஸ்ரீதரன்.

## GRAND LEAP வருஷம்

◆ 'கல்கி' 8.3.92 இதழ் துணுக்கில் மங்கதேவன் குறிப்பிட்டபடி 2004ம் வருஷம் பிப்ரவரி மாதம் ஐந்து ஞாயிற்றுக் கிழமைகள் வராது. ஐந்து திங்கட்கிழமைகள்தான் வரும். ஏனென்றால் 2000 வருஷம் பிப்ரவரி மாதத்திற்கு 30 நாட்கள். 400 ஆல் வகுக்கப்படும் வருஷங்களுக்கு GRAND LEAP YEAR என்று பெயர். எனவே ஒருநாள் தள்ளிப் போகிறது.

ஒரு வேடிக்கை : பிப்ரவரி 30ல் பிறந்தவர்களுக்கு அவர்கள் ஆயுட்காலத்தில் பிறந்த நாளைக் கொண்டாடவே முடியாது!

சென்னை - 28, எஸ். குமரேஷ்.

# பாஸ்கரன் ஏன் இப்படிச் செய்தான்?

**ஜனனி**

''மேடம்... உங்களைப் பார்க்க ஒருவர் வந்திருக்கிறார்.. பாஸ்கரன் என்று சொல்கிறார். ஐந்து நிமிஷம் பார்த்தால் கூடப் போதும் என்கிறார்!'' எனச் சொன்னான் ஆபீஸ் பணியாள்.

பவானிக்கு எரிச்சலாக வந்தது. இவன் எதற்கு அவளைத் தேடி வர வேண்டும்! 'சம்பந்தம் பிடிக்கவில்லை!' எனச் சொல்லி அனுப்பியாகி விட்டது. புரிந்து கொண்டு ஒதுங்க வேண்டியதுதானே? மறுபடியும் வந்து பேச என்ன இருக்கிறது?

நான்கு நாட்கள் முன்புதான் பாஸ்கரன் அவளைப் பார்க்க வந்தான். முதல் பார்வையிலேயே பவானிக்கு அவனைப் பிடித்து விட்டது. பார்க்கக் கண்ணியமாகத் தெரிந்தான். பண்புடன் பழகினான். கனிவுடன் பேசினான்.

பவானி ஒரு பெரிய நிறுவனத்தில் ஒரு செக்ஷனுக்கு அதிகாரி. பாஸ்கரன் ஓர் இளம் எலக்டிரானிகல் என்ஜினியர். தொழிற்பேட்டையில் சொந்தமாக ஒரு பாக்டரி இருந்தது.

நல்ல குடும்பம் எனக் கேள்விப்பட்டிருந்தார்கள். பெண் பார்த்தவுடனேயே தங்களுக்குப் பிடித்து விட்டது எனப் பாஸ்கரன் வீட்டில் சொல்லி விட்டார்கள். சீர் செனத்தி எதையுமே கேட்கவில்லை. 'எல்லாமே உங்கள் விருப்பம்!' எனப் பெருந்தன்மையாகச் சொல்லி விட்டார்கள்.

இத்தனை நேரம் கல்யாணத்திற்கு முகூர்த்தம் பார்த்துச் சத்திரத்திற்கும் முன் பணம் கொடுத்திருப்பார்கள் - பாஸ்கரன் புறப்படும் சமயம் எதிரில் சியாமளா வந்திராவிட்டால்...

பவானியின் வீட்டுக்கு எதிர்வீடு சியாமளா. அவள் கணவன் அடிக்கடி சுற்றுப்பயணம் போகும் வேலை. மாதத்தில் இருபது நாட்கள் ஊரில் இருக்க மாட்டான். சியாமளாவிற்குப் பேச்சுத் துணை வேண்டும். அதற்காக அடிக்கடி பவானி வீடு வருவாள்.

பாஸ்கரனை அவள் ஏறிட்டுப் பார்த்த போது அவள் முகத்தில் தோன்றிய கடுமையையும் கோபத்தையும் கவனிக்கத் தவறவில்லை.

பாஸ்கரன் விடைபெற்றுக் கொண்டு போன பிறகு, பவானி அவளை விசாரித்தாள். ''ஏன் சியாமளா! உனக்கு இவர்களைத் தெரியுமா?''

சியாமளா தயங்கினாள். ''பவானி! ஒரு கல்யாணத்தை நடத்தி வைத்தால் புண்ணியம்! என்னால் ஒரு கல்யாணம் தட்டிப் போனால் அது ரொம்பத் தப்பும்மா!''

பவானி வற்புறுத்தினாள். ''பரவாயில்லை எதுவாக இருந்தாலும் சொல். இன்னும் நாங்கள் ஏதும் நிச்சயம் செய்து விடவில்லை.''

இரண்டு வருடங்களுக்கு முன்பு - இதே பாஸ்கரனுக்கும் சியாமளாவின் அத்தை பெண் நிர்மலாவுக்கும் கல்யாணம் நிச்சயமாகியிருந்தது.

கல்யாணத்திற்கு முதல் நாள் பாஸ்கரன் தன் குடும்பத்துடன் வந்து இறங்கினான். பெரிய கூட்டம் இல்லை. எண்ணிப் பத்தே பேர். கொஞ்சம் கூட படாடோபமோ அலட்டலோ இல்லை. ரொம்பக் கண்ணியமாகப் பழகினார்கள்.

நிர்மலா அவள் பெற்றோருக்கு ஒரே பெண். கல்யாணத்தைப் பெரிய அளவில் அமர்க்களமாக ஏற்பாடு செய்திருந்தார்கள்.

மாப்பிள்ளை அழைப்பு நல்லபடியாக முடிந்தது. ''நல்ல பிள்ளை'' என எல்லோரும் மெச்சும்படி பாஸ்கரன் நடந்து கொண்டான்.

கல்யாணத்தன்று காலை. மாப்பிள்ளை

முகூர்த்தத்திற்குத் தயாராக இல்லை. குளிக்கக் கூட இல்லை.

நிர்மலாவின் தந்தை அவர்களைத் துரிதப்படுத்தப் போனார்.

பையனுடைய சிநேகிதர்கள் அவன் ஏமாந்து விட்டதாகச் சொல்கிறார்களாம். அவன் தோற்றத்திற்கும் யோக்கியதாம்சங்களுக்கும் இதைவிடப் பெரிய இடம் கிடைக்கும் என்றார்களாம். பெண் ஒன்றும் பெரிய ரதி இல்லை எனச் சொல்லிக் காட்டுகிறார்களாம்.

ஆகையால் ஒரு மாருதி கார் வாங்கத் தேவையான பணம் கொடுத்தால்தான் கல்யாணம் நடக்கும் என்றான் பாஸ்கரன்.

பெண்ணைப் பெற்றவர் நிலை குலைந்து போனார். அத்தனை பணத்திற்கு எங்கே போவார்?

பாஸ்கரன் வரதட்சணையே வேண்டாம் எனச் சொல்லியிருந்ததால் கல்யாணச் செலவுகளுக்குத் தாராளமாகக் கையிருப்பை அள்ளி விட்டிருந்தார்.

''உங்கள் இஷ்டம் போல் எது செய்தா



ஹும் போதும் எனச் சொன்னீர்களே!'' எனக் கேட்டார் அவர்.

''ஒரு பேச்சுக்கு அப்படிச் சொன்னேன். அதற்காக இப்படி ஒன்றுமே செய்யாமல் இருப்பீர்கள் எனக் கண்டோமா?''

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? முப்பது பவுன் நகை, பத்தாயிரம் ரூபாய், வெள்ளிப் பாத்திரம்.''

''அதெல்லாம் உங்கள் மகளுக்கு. எனக்கு என்ன கொடுத்தீர்கள்?''

பாஸ்கரனின் பெற்றோர் கூ ட ப் பிள்ளையின் பேச்சை ரசிக்கவில்லை. பிள்ளையைத் தனியே கூட்டிப் போய்க் கண்டித்தனர்.

''என்னடா பாஸு! இப்படி ஒரு பெரிய குண்டைத் திடீர்னு தூக்கிப் போடுகிறாய்? இத்தனை பெரிய தொகைக்கு அவர் எங்கே போவார், பாவம்! இத்தனை பேர் மத்தியில் நம்ம கௌரவம் என்ன ஆகிறது? உனக்கு என்ன ஆயிற்று?''

''கல்யாணம் எனக்கு. என்ன கேட்க வேண்டும், எப்போது கேட்க வேண்டும் என எனக்குத் தெரியும். இப்போது கேட்காவிட்டால் ஆறின கஞ்சி பழம் கஞ்சியான கதைதான். கார் வாங்கித் தருவதாக ஒப்புக் கொள்ளட்டும். தாலி கட்டுகிறேன். ஆனால் ஒன்று. அவர் பெண் நம்ம வீட்டிற்கு அந்தக் காரிலேதான் வர வேண்டும். அதுவரை அவர் வீட்டில் இருக்க வேண்டியதுதான்.''

நிர்மலாவின் தந்தை திகைத்துப் போனார். இப்போது இருக்கும் நிலையில் இன்னும் ஒரு வருஷத்திற்குள் அத்தனை தொகை புரட்டுவது சிரமம். கல்யாணம் செய்து கொடுத்துப் பெண்ணை வீட்டில் இருத்திக் கொள்வதா?

பாஸ்கரனின் தாயார் கூடப் பிள்ளையின் மனத்தை மாற்ற முயன்று தோற்றுப் போனாள்.

''நீ பேசாமல் இரும்மா... எல்லாம் இவர் சமாளித்துப் பணம் தருவார். இத்தனை தூரம் வந்து கல்யாணம் நின்று போனால் எத்தனை அவமானம் என்பது அவருக்குத் தெரியாதா? இந்தக் கல்யாணம் நின்று போனால் அப்புறம் எவன் இவர் பெண்ணைக் கட்டுவான். காலம் பூராவும் கன்னியாகவே இருக்க வேண்டியதுதான்.''

நிர்மலாவின் தந்தையின் காதுகளில் இது விழ, அவர் தன் நிதானத்தை இழந்தார்.

''என்னடா சொன்னே?'' என அவர் பாஸ்கரன் சட்டையைப் பிடிக்கப் போய் ஏக அமளி. இரு பக்கமும் பேச்சும் ஏச்சும் கிளம்ப, பாஸ்கரன் பெற்றோர் அடுத்த அரை மணியில் பந்தலை விட்டு வெளியேறினார்கள்.

**சி**யாமளா சொன்னதையெல்லாம் கேட்ட பவானிக்கு ஆத்திரம் பிறிட்டது. இந்த அயோக்கியனைக் கல்யாணம் செய்து கொண்டு எப்படிக் குடித்தனம் நடத்துவது? நாளைக்கு அவள் கல்யாணத்தின் போதும் இதே போல் ஒரு பிரச்னையை அவன் எழுப்பினால்... அவள் அப்பா மாஜஸ்தர். தாங்க மாட்டார். உயிரையே கூட விட்டு விடுவார்.

மறுநாள் அவள் அப்பா பாஸ்கரனின் வீட்டுடன் டெலிபோனில் தொடர்பு கொண்டார். ''பெண்ணிற்கு இஷ்டம் இல்லை'' எனச் சொல்லிச் சம்பந்தத்தை முறித்தார்.

அந்தப் பாஸ்கரன்தான் பவானியைப் பார்க்க அவள் அலுவலகம் தேடி வந்திருந்தான்.

''என்ன?'' என வெறுப்புடன் கேட்டபடி அவன் எதிரில் வந்து நின்றாள் பவானி.

''ஒரே ஒரு நிமிஷம். ஒரே ஒரு கேள்வி. அன்று நான் உங்களைப் பெண் பார்க்க வந்த போது உங்கள் வீட்டில் இந்தக் கல்யாணத்தில் எல்லோருக்கும் பிடித்தம் இருந்தது. திடீரென்று மனம் மாறக் காரணம்?''

''இதற்குக் காரணம் என்று ஒன்றும் தனியாக இல்லை. ஈடுபாடு இல்லை.. அவ்வளவுதான்.''

''இல்லை. நாங்கள் விடைபெற்றுக் கொண்டு போன சமயம் கூட உங்கள் முகம் சம்மதத்தைத்தான் சொல்லியது. நான் போன பிறகு ஏதோ நடந்து...''

பவானிக்குக் கோபம் வந்தது. இவனிடம் என்ன பயம்? சியாமளா சொன்னது அத்தனையையும் கடகடவென்று ஒப்பித்தாள்.

''இப்போது என்ன சொல்கிறீர்கள்? இதெல்லாம் பொய் என்றா?''

''இல்லை. நூற்றுக்கு நூறு அது உண்மை. இதைவிட மோசமாகத்தான் நான் பேசினேன்.''

''இப்படிச் சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லை?''

''துளிக்கூட இல்லை. பெருமைப்படுகிறேன். நாங்கள் கல்யாணப் பந்தலை விட்டுப் போன பிறகு என்ன நடந்தது என உங்கள் தோழி சொன்னார்களா?''

''உம். சொன்னாள். 'எவன் தாலி கட்டுவான்' எனச் சவால் விட்டுப் போனீர்களே. அதைப் பொறுக்க முடியாத பவானியின் அப்பா, தன் தங்கை மகன் சேகருக்கு நிர்மலாவை அதே முகூர்த்தத்தில் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார்.''

''நான் அப்படிக் கத்தாவிட்டால் அந்தக் கல்யாணம் நடந்திருக்குமா? நிர்மலாவும் சேகரும் ஒருவரையொருவர் விரும்பினார்கள். சேகர் சாதாரண வேலையில் இருந்தான். வருமானம் கம்மி. நிர்மலாவின் பேச்சை மதிக்காமல் என்னுடன்

கல்யாணம் செய்யத் தீர்மானித்து ஏற்பாடுகளையும் துவங்கி விட்டார்கள். கல்யாணத்திற்கு முதல் நாள் இரவு தூக்கம் பிடிக்காமல் சத்திரத்தின் பின்புறம் உலவிக் கொண்டிருந்த சமயம், வெறிபிடித்தவள் போல கிணற்றை நோக்கி ஓடிய நிர்மலாவைத் தடுத்து நிறுத்தியவன்தான் நான். அப்போதுதான் எனக்கு எல்லாம் புரிந்தது. அவள் விருப்பப்பட்ட பையனுடன் அவளைச் சேர்த்து வைக்க எனக்குத் தெரிந்த வழிதான் அந்த நாடகம்.''

''இதெல்லாம் என்னை நம்பச் சொல்கிறீர்களா'' என இகழ்ச்சியுடன் கேட்டாள் பவானி.

''வேண்டாம். நம் கல்யாணம் நடக்காமல் போனால் கூட வருத்தம் இல்லை. உங்களைப் போன்ற நல்லவர்கள் மனத்தில் என்னைப் பற்றி ஒரு கெட்ட அபிப்பிராயம் உருவாவதை நான் விரும்பவில்லை. என் நிலையை விளக்கிப் போகத்தான் வந்தேன்.. காது கொடுத்துக் கேட்டதற்குக் கடமைப்பட்டிருக்கிறேன். வருகிறேன்.''

பாஸ்கரன் போய் விட்டான்.

**பா**ஸ்கரன் தன்னிடம் சொன்னதை சியாமளாவிடம் விவரித்தாள் பவானி.

''அப்படியும் இருக்கலாம். பவானி.. எதற்கும் நான் நிர்மலாவை விசாரிக்கிறேன்'' எனச் சொன்ன சியாமளா அன்றே கடிதம் எழுதினாள்.

பதில் பவானி பெயருக்கு வந்தது.

அன்புள்ள சகோதரி,

பாஸ்கரன் உங்களிடம் சொன்னது அத்தனையும் உண்மை.

நான் இன்று சந்தோஷமாக, இல்வாழ்க்கையில் ஈடுபடக் காரணம் அந்த நல்மனம் படைத்தவர்தான்.

என் அப்பாவின் ஆத்திரத்தைக் கிளப்பி, அதே பந்தலில் என் கழுத்தில் சேகர் தாலி கட்ட வேண்டுமென்பதற்காக, தன் கண்ணியத்தையும், மதிப்பையும் விட்டுக் கொடுத்து, ரொம்பவும் மோசமாகப் பேசினார். அவர் அப்பா, அம்மாவே அவரை உதாசீனப்படுத்தும் அளவிற்கு அவர் போனார். எனக்காக - என் வாழ்க்கை சிறக்க.

இத்தனை நாள் யாரிடமும் இந்த உண்மையைக் கூறாத அவர் உங்களைத் தேடி வந்து சொல்லி இருக்கிறார் என்றால், உங்களை அவர் எத்தனை தூரம் நேசிக்கிறார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது.

எனக்குக் கூடப் பிறந்த அண்ணன் யாரும் இல்லை. சகோதரி, என் உடன் பிறவாத சகோதரரான அவர் மனம் வாடச் செய்யாதீர்கள்.

அன்புடன்,
நிர்மலா.

**ஒ**ரு வாரம் கழித்து -

பாஸ்கரனின் அலுவலகம்.

''ஸார்! உங்களைப் பார்க்க ஒரு லேடி வந்திருக்காங்க. பவானின்னு சொல்றாங்க. ஒரு ஐந்து நிமிஷம் பார்த்துட்டுப் போறாங்களாம்.''

பாஸ்கரனும் புன்னகையுடன் நிமிர்ந்து, ''வரச் சொல்!'' என்றான்.



☛ நாமக்கட்டி பாக்கி

☛ வெளிப்படையாக.....

# தமிழக பட்ஜெட் எப்படி உள்ளது?

● சி. காந்திராஜ், செம்போடை

? 'அரசின் திட்டங்கள் மக்களைச் சென்றடைகிறது எனக் கவனிக்க, அனைத்துக் கட்சியினர் அடங்கிய குழுவைத் தமிழக அரசு நியமிக்க வேண்டும்' என இந்திய கம்யூனிஸ்ட் கட்சி கூறியிருப்பது பற்றி?

! நல்ல யோசனைகள் அரசால் ஏற்கப்படுவதில்லை.

● ஜி. பாலகிருஷ்ணன், சங்கரன்பந்தல்

? பொதுவாக தமிழக பட்ஜெட் எப்படி உள்ளது?

! புள்ளி விவரங்கள் பலவற்றில் முன் பின்னாக உள்ள முரண்பாட்டைக் கருணாநிதி எடுத்துக்காட்டியாகிவிட்டது. மளிகைச் சாமான் வரிக் குறைப்பு விஷயத்தில் அத்தியாவசியப் பண்டங்களுக்குச் சலுகை சைபர் என்பதை நுகர்வோர் பாதுகாப்புக் குழு வெட்ட வெளிச்சமாக்கி விட்டது. ஹோட்டல்கள் மீது வரி மூலம், இட்லி முதல் சாப்பாடு வரை அனைத்தின் விலையையும் உயர்த்தியாகி விட்டது. வாகனங்களுக்கு வரி அதிகரிப்பு போக்கு வரத்துச் செலவைக் கூடுதலாக்கி, விலைவாசி உயர வழி வகுக்கும் என்பதை அந்தத் துறையில் உள்ளோர் கூறியாகி விட்டது. வரி விதிப்பு அம்சங்களையெல்லாம் மத்திய அரசு தன்னிடத்திலேயே வைத்திருப்பதால் மாநில அரசுக்கு வரி வசூல் வாய்ப்புக்களே குறைவு என்பதைப் பொருளாதார நிபுணர்கள் பேசியாகிவிட்டது. மது மீது வரி உயர்வு வழக்கமான அம்சம் என்று மதுப் பிரியர்கள் அங்கலாய்த்தாகிவிட்டது. கவரிங் நகை வரி குறைப்பு உண்மையில் வரி உயர்வே என்று குமரி அனந்தன் குட்டை உடைத்தாகிவிட்டது. மிஞ்சுவது குங்குமம். அடுத்த பட்ஜெட்டுக்கு அமைச்சருக்கு நாமக்கட்டியை நினைவூட்டுகிறோம்!

● ஆர். ரமேஷ், கம்பம்

? ஜாவித் மியான்தாத்தின் கிறுக்குத்தனமான சேஷ்டை எதைக் காட்டுகிறது?

! கிரிக்கெட்டை விட்டு விட்டு அவர் ஹை ஜம்ப் போட்டியில் கலந்து கொண்டாலும் பிரகாசிப்பார் என்பதை.

● கே.பி. சாரதி, வேலூர்

? நீங்கள் ''கிணற்றுத் தவளை'' என்கிறாரே கருணாநிதி?

! என்ன செய்ய, தலைவர்கள் தண்ணீர்ப் பூச்சிகளாக மாறிக் கிணற்றுக்குள் இருக்கும் தருணங்களில் அவர்களைக் கண்காணிக்க கிணற்றுத் தவளைகளாக நாமும் வடிவமெடுக்க வேண்டியிருக்கிறது.

● இரா. செந்தில்குமார், குத்தாலம்

? 'விடுதலைப்புலிகளை நாங்கள் ஆதரிக்கிறோம்' என்று வெளிப்படையாகக் கூறியுள்ளாரே பண்ருட்டியார்?

! வெளிப்படையாகக் கண்டிக்கப்பட வேண்டிய விஷயம். தண்டிக்கப்பட வேண்டிய விஷயமாகவும் மாற விடுதலைப் புலிகளைத் தேசத் துரோகிகளாக அறிவித்துத் தடை விதிக்கும் சட்டம் இங்கு இயற்றப்படுவது அவசியம்.

● மன்மதன் பிரகாஷ், புதுவை

? கோர்பச்சேவ் ''பென்ஷன் போதவில்லை'' என்று கூறியிருப்பது பற்றி?

! பதவியில் இருந்தபோது அவர் தவறான வழிகளில் பணம் சம்பாதிக்கவில்லை என்பதைக் காட்டுகிறது.

● கே.பி. முத்துசாமி, காஞ்சிக்கோவில்

? மத்திய அரசின் பட்ஜெட்டைக் கண்டித்தும் குறை கூறியும் பேசும் எதிர்க் கட்சித் தலைவர்கள், பட்ஜெட் எந்த முறையில்



☛ பென்ஷன் போதவில்லை

☛ பிரபாகரனைப் பிடிக்க

**நீங்கள் கேட்டவை - தராசு**



இருக்க வேண்டும் என்றும் சொல்லலாம் அல்லவா?

! சொல்லலாமே! பட்ஜெட் தயாரிப்புப் பணிகளை ஆரம்பிக்கு முன் நிதி அமைச்சரும் அவர்களை அழைத்து யோசனைகள் கேட்கலாமே!

● அ. சண்முக சுந்தரம், சிட்லபாக்கம்

? **புதிய அமைச்சர் ரகுபதி, 'முன்பு புரட்சித் தலைவி நடித்த படங்களுக்கு பிளாக்கில் பத்து ரூபாய்க்கு டிக்கெட் விற்றால் நான் இருபது ரூபாய் கொடுத்து வாங்கிப் பத்து முறைக்குக் குறையாமல் பார்ப்பேன்' என்று கூறியிருக்கிறாரே!**

! அம்மாவின் படம் பன்முறை பார்ப்பதுதான் அமைச்சரவையில் நுழையும் தகுதியை அளிக்கும் என்று தெரிந்து வைத்திருக்கிறார். அதுவும் பிளாக்கில் பார்த்தது கூடுதல் தகுதி!

● எஸ். மங்களம், கும்பகோணம்

? **நீண்ட காலக் குத்தகையில் இருக்கும் கோயில் நிலங்களை மீட்க முதல்வர் நடவடிக்கை எடுக்க உத்தேசித்துள்ளது குறித்து?**

! சிறந்த நோக்கம்; நிறைவேற்றுவது சிரமம்.

● பி. நடராஜன், அன்னூர்

? **'பிரபாகரனைப் பிடிக்க இஸ்ரேல் உதவியை இந்தியா நாட வேண்டும்' என்று சு.சுவாமி கூறியுள்ளாரே?**

! பிரபாகரன் இருப்பது இலங்கை மண்ணில், இந்தியாவில் அல்ல என்பதை மறந்து விட்டுப் பேசுகிறார். புலிகள் தலைவனைப் பிடிக்க எற்கெனவே மொஸாத்தின் உதவியை இலங்கை அரசு பெற்றும் விசேஷ முன்னேற்றம் காண முடியவில்லை என்பது ஒரு செய்தி.

● எம். ராஜேந்திரன், லால்குடி ❑

? **வருமான வரி கணிப்பின் போது பெண்களுக்கு மட்டும் Standard Deduction 12,000 லிருந்து 15,000 ஆக உயர்த்தப் பட்டுள்ளது சரியா?**

! தவறு. சம உரிமை கோரும் மாதர் நல அமைப்புக்கள் இதை எதிர்க்க வேண்டும்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
எம். ராஜேந்திரன்,
22, ஓமக்குளத் தெரு,
லால்குடி - 621 601

● பா. குமார், தி.வெ.நல்லூர்

? **இந்தியா ஃபைனலில் நுழையுமா?**

! வெலிங்டனில் வெஸ்ட் இண்டீஸிடம் தோற்றது அந்த நம்பிக்கையை நலிவுறச் செய்துவிட்டதே!

● கி. ராமதாஸ், சென்னை

? **மு.க. முத்துவுக்கு 'ஜெ' அளித்த பண முடிப்பு பற்றி?**

! ரசனைக் குறைவு என்பதுடன் மோசமான முன்னுதாரணம். அவருக்குள்ள செல்வாக்குக்குத் தேவையற்ற ஸ்டண்ட்.

● ஆர். நாகராஜன், போபால்

? **29.12.91 இதழில் பரமாச்சார்யாளின் காப்பி குடிப்பது பற்றிய கருத்து மிகவும் பயனுள்ளதாய் இருந்தது. ஆனால் ஓரிரு வருடங்களுக்கு முன்பு தராசு கேள்வி - பதில் பகுதியில் 'காலையில் குடிப்பதற்கு ஏற்றது?' என்ற கேள்விக்குக் காப்பியின் பெருமைகள் விவரிக்கப்பட்டிருந்ததே?**

! இருக்கலாம். மறுக்கவில்லை. சங்கராச்சார்யார் கூறுவன எல்லாவற்றையுமே எல்லோருமே கடைப்பிடித்து விட முடிகிறதா? அப்படி முடியும் என்றால் ஜகத் குருவுக்கே அவசியமில்லாமல் போய் விடுமே! நானும் குற்றம் குறைகள் உள்ளவன்தான். என்னால் கடைப்பிடிக்க முடிகிற பரமாச்சார்யாளின் கருத்துக்களை மட்டும்தான் கல்கியில் வெளியிட வேண்டும் என்பது பெரியவருக்கு எவ்விதத்தில் நியாயம் செய்வதாகும்? நாலு தரம் காப்பி சாப்பிடுவதை இரண்டு தடவையாகக் குறைத்துக் கொண்டால் அதுவே பெரியவருக்கு நாம் காட்டும் மரியாதை ஆகாதா? படிப்படியாகத்தான் முன்னேற முடியும் - எதிலும்.



◆ தேவையற்ற ஸ்டண்ட்

◆ கிணற்றுக்குள்....

என்னுடைய கூச்சத்துக்கும் வெட்கத் துக்கும் காரணமான அந்த மாணவி வேறு யாருமில்லை, என் மனைவியேதான்! அவள் திருமணத்துக்குப் பிறகும் கூட ராணிமேரி கல்லூரியில் தன் படிப்பைத் தொடர்ந்து கொண்டிருந்தாள். தோழிகளின்

# வாசனின் பெருந்தன்மை

வற்புறுத்தலுக்கு இணங்க ஷூட்டிங் பார்க்க வருவாள்.

தோழிகள் சும்மா இருப்பார்களா? என் மனைவியை ரொம்பத்தான் 'கோட்டா' பண்ணுவார்கள். அதுவும் நான் நடிகை யரைத் தொட்டு ஆக்ஷன் சொல்லித் தர வேண்டிய கட்டங்களில் அந்தக் கேலியும் கிண்டலும் உச்ச கட்டத்துக்கே போய் விடும். இப்போது புரிகிறதா என் கூச்சத்துக் கும் வெட்கத்துக்கும் காரணம்?

'காதலிக்க நேரமில்லை' வண்ணப் படத்தை பிராஸஸ் செய்து பிரிண்ட் போட நாங்கள் 'ஜெமினி கலர் லேப்'பைப் பயன் படுத்திக் கொண்டோம். 'ரிஸல்ட்' அற்புத மாய் இருந்தது. ஜெமினி அதிபர் வாச னுக்கு ரொம்ப மகிழ்ச்சி. எங்கள் யூனிட் டைச் சேர்ந்த அத்தனை பேருக்கும் விருந் தளித்தார். அப்போது அவர் பேசி யதை என்னால் மறக்கவே முடியாது :

''நான் கலர் லேப் தொடங்கி இரண்டு வருஷங்களாகி விட்டன. நிறைய கலர் படங்கள் எடுக்கப்படும் ஹிந்தி பட உலகை நம்பித்தான் ஆரம்பித்தேன். ஆனால் அவர்கள் இங்கே வருவதில்லை. இப்போது ஸ்ரீதர் தமது படத்தை இங்கே 'பிராஸஸ்' செய்ததன் மூலம் ஜெமினி கலர் லேபின் மதிப்பை வடக்கே இருப்பவர்கள் நிச்சயம் உணர்ந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். ஸ்ரீதர் புது முகங்களை அறி முகப்படுத்துவது போல் ஜெமினி கலர் லேபையும் ஹிந்தி பட உலகத்துக்கு அறி முகப்படுத்தி வைத்திருக்கிறார்!''

இவ்வாறு வெளிப்படையாகப் பேசி யதன் மூலம் வாசன் எனக்குப் பெரிய கௌரவத்தை வழங்கினார் என்று கருது கிறேன். அவருடைய கணக்கும் தப்ப வில்லை. 'காதலிக்க நேரமில்லை' வெளி யான பிறகு, அதன் டெக்னிகல் சிறப்பை உணர்ந்த ஹிந்தி பட உலகினர், வாசன் எதிர்பார்த்தபடியே அதிக அளவில் ஜெமினி கலர் லேபை நோக்கிப் படை யெடுக்கத் தொடங்கினர்.

டெக்னிகல் சிறப்பு ஒரு பக்கம் இருக்க, 'இது போன்ற ஒரு காமெடி படம் இதுவரை வெளிவந்ததே இல்லை' என்ற சிறப்பையும் பெற்றது காதலிக்க நேர மில்லை. நாகரிகமான, ஆபாசமில்லாத நகைச்சுவை. இன்றைய தினம் திரைப் படங்களில் காண முடியாத அந்த நகைச் சுவை அன்று அமோக வரவேற்பைப் பெற்றது.

ஏழெட்டு வாரங்கள் House full ஆக ஓடியது படம். அதன் பிறகு அந்த நிலையி லிருந்து கொஞ்சம் குறைந்தது. ''என்ன டாது ஆரம்பத்தில் இருந்த வேகம் தொட ராது போலிருக்கே'' என்று நான் கவலைப் படத் தொடங்கிய சமயம் ஒரு சர்ச்சை வெடித்தது!

''படத்தின் பெயரிலேயே ஆபாசம் தொனிக்கிறது; காட்சிகளும் ஆபாசமாய் உள்ளன; சமுதாயத்தைக் கெடுக்கக் கூடிய இத்தகைய படங்களை அரசு அனுமதிக்க லாமா?'' என்று ஒரு எம்.எல்.ஏ சட்ட சபையிலேயே பிரச்னை கிளப்ப, வேறு சிலர், ''படம் ஆபாசமில்லை; கவர்ச்சிகர மாக எடுக்கப்பட்டுள்ள காதல் கதை, அவ்வளவே; அது எடுக்கப்பட்டுள்ள விதம் பாராட்டுக்குரியது'' என்று எதிர் வாதம் புரிய, விவாதம் சூடு பிடித்து பத்திரி கைகளில் பிரமாதப்பட்டது.

விவகாரம் சட்டசபை வரை போய் விட்டதால் நான் உள்ளூற பயந்தேன். 'படத்தைத் தடை செய்து விடுவார்களோ!' என்ற கவலையில், கோர்ட்டுக்குப் போய் 'ஸ்டே' வாங்கும் உத்தேசத்தில், ''வக் கீலை இப்போதே சந்தித்துப் பேசலாம்'' என்று கூட பார்ட்னர்கள் யோசனை சொன் னார்கள்.

ஆனால் நல்ல வேளையாக அப்படி தடை உத்தரவு ஏதும் பிறப்பிக்கப்பட வில்லை. சட்டசபையில் நடந்த விவா தங்கள் அதற்கு வெளியேயும் பரபரப்புடன் தொடர, படத்துக்கு நல்ல 'பப்ளிசிடி' கிடைத்தது. அது மட்டுமா? ஏற்கெனவே பார்த்தவர்கள் கூட 'படம் ஆபாசமா?'



எஸ்.எஸ். வாசன் : கணக்குத் தப்பவில்லை

என்று எடைபோட்டுப் பார்க்க மறுபடி பார்த்தார்கள்! பிறகு படத்தின் வெற்றிக்குக் கேட்பானேன்! ஆக மொத்தம் 'கலெக்ஷன்' கொஞ்சம் குறைய ஆரம்பித்த சமயம் வெடித்த சர்ச்சை, பெரிய அனுகூலமாக முடிந்தது!

**கா**தலிக்க நேரமில்லை' படத்தின் வெற்றிக்கு மற்றொரு காரணம், அது இளைய தலைமுறையினரை வெகுவாக ஈர்த்ததுதான். அவர்களுக்குப் படத்தின் 'காஸ்ட்யூம்'ஸும் நடன 'மூவ்மெண்டு' களும் அதுவரை திரையுலகில் காணப் படாத முறையில், மாடர்னாக அமைந்தது தான் பெரிய கவர்ச்சியாக இருந்தது. அப்படி புதுமையாக அமைய வேண்டும் என்று நான் ஆரம்பத்திலிருந்தே திட்ட மிட்டுச் செயலாற்றி இருந்தேன். இதன் தொடர்ச்சியாக ஒரு வேடிக்கை சம்பவம் :

வழக்கமாக என் படங்களுக்கு டான்ஸ் மாஸ்டராகப் பணிபுரிந்து வந்தவர் கோபாலகிருஷ்ணன். ஆனால் 'காதலிக்க நேரமில்லை' படத்துக்கு மாடர்ன் டான் ஸாக அமைக்கத் திட்டமிட்டதால் வேறு யாரையாவது போடுவது என்று தீர்மா னித்து, கோபு முதலான பல நண்பர் களிடம் சொல்லி வைத்திருந்தேன்.

ஒரு நாள் கோபு, என்னிடம் ஜெய ராமன் என்ற ஒரு டான்ஸ் மாஸ்டரைப் பற்றிக் கூற "அவரைப் பிற்பகல் மூன்று மணிக்கு வரச் சொல்லுங்கள்" என்று நான் சொன்னேன். சரியாக மூன்று மணிக்கு ஒருவர் வந்தார். "புதிய டான்ஸ் மாஸ்டர் வேணும்னு சொன்னீர்களாம்" என்று அவர் கூற, நானும் 'ஆமாம்' என்று தலையாட்டி விட்டு, 'காதலிக்க நேரமில்லை' படத்துக் காகப் பதிவாகியிருந்த ஒரு பாடலைப் போட்டேன். டான்ஸ் மூவ்மெண்ட்ஸ் செய்து காட்டுமாறு கோரினேன். அவர் சற்று நேரம் பாடலைக் கேட்டு விட்டு ஆடிக் காட்டினார். அந்த நடன அசைவுகள் எனக்கு மிகவும் பிடித்திருந்தன. அடுத்து இன்னொரு பாடலுக்கும் மூவ்மெண்ட்ஸ் கொடுத்தார். நான் 'ஓ.கே.' என்று தீர்மா னித்து மற்ற விஷயங்களைப் பேச ஆரம் பித்தேன். என் கோரிக்கைகள், நிபந்தனை கள் எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டு அவர் புறப்பட்டுச் சென்றார்.

**ம**ணி நாலாகி விட்டது. எனக்கு வேறு ஒரு வேலை இருந்தது. அவசரமாக வெளியே புறப்பட்டேன். வாசலில் ஒருவர் காத்திருந்தார். என்னைப் பார்த்ததும், "வணக்கம்! என் பெயர் ஜெயராமன். கோபு ஸார் அனுப்பினார்" என்றார்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது! அப்படியானால் நான் ஒரு மணிநேரமாகப் பேசிக் கொண்டிருந்தது ஜெயராமன் இல் லையா?

இல்லை! அவர் கோபுவால் அனுப்பி வைக்கப்படவும் இல்லை! வேறு ஒரு பொது நண்பர் மூலம் கேள்விப்பட்டு, அபாயிண்ட்மெண்ட் இல்லாமலே சரியாக மூன்று மணிக்கு வந்திருக்கிறார் தங்கப்பன். அவரை ஜெயராமன் என்று நினைத்து நான் பரீட்சித்துப் பார்த்துப் பேசி முடித்தும் இருக்கிறேன்! நிஜ ஜெயராமன், வழியில் ஏற்பட்ட ஒரு தடங்கல் காரணமாகத் தாமத மாக வந்து இதோ காத்திருக்கிறார்!

எனக்கு என்ன செய்வது என்றே சில நிமிஷங்கள் ஒன்றும் புரியவில்லை. பிறகு, மெல்ல சுதாரித்துக் கொண்டு (உண்மை யான) ஜெயராமனிடம் நடந்ததை ஒளிவு மறைவு இன்றி விளக்கி, "ஸாரி, உங்களை வேறு ஒரு சந்தர்ப்பத்தில் பயன்படுத்திக் கொள்கிறேன்" என்றேன். அவரும் முத லில் ஏமாற்றமடைந்த போதிலும் என் வார்த்தையில் நம்பிக்கை வைத்துத் திரும்பினார். கோபுவிடமும் விஷயத்தை விளக்கினேன். "விதியின் விளையாட்டு என்கிறார்களே, என்னடான்னு யோசிக்கக் கிட்டிருந்தேன்; இப்ப புரிகிறது" என்றார் கோபு.

'காதலிக்க நேரமில்லை' படம் ரிலீஸ் ஆனவுடன் டான்ஸ் மாஸ்டர் தங்கப்ப னுக்கு ஏகப்பட்ட 'டிமாண்ட்'! பயங்கர 'பிஸி'யாகி விட்டார்! ஒரு காலத்தில் அவ ரிடம் உதவியாளராய்ப் பணியாற்றியவர் இன்று ஒரு பெரிய 'ஸ்டார்'!

'அவர் யார்' என்பதை அடுத்த வாரம் சொல்கிறேன்! அதோடு எம்.ஜி.ஆரை வைத்து ஒரு படம் டைரக்ட் செய்ய வேண் டும் என்ற என் ஆசை எப்படி வளர்ந்து, எவ்வாறு முடிந்தது என்பதையும் விவரிக் கிறேன். அதுவரை டபுள் சஸ்பென்ஸாக இருக்கட்டுமே!

# கங்கை புத்தக நிலையம்
# வழங்கும் புதிய வெளியீடுகள்

**விநாயகர் அகவல் (உரையுடன்)**
ஔவையார் அருளிய விநாயகர் அகவலை அர்த்தம் புரிந்து படித்தால் பலன் அதிகம். நன்மைகள் பல உண்டு. அதற்காகவே உரையுடன் கையடக்கப் பதிப்பாகப் பதிப்பித்துள்ளோம். ரூ. 3.00

**சமயம், இலக்கியம் வரலாறு அறிவியல், கட்டுரைகள்**

திருமலைப் புகழ் 15.00
(திருமலை மற்றும் திருமலை ராயன் பற்றிய அருமை பெருமைகளை விளக்கும் நூல்)
கண்ணதாசனின் அர்த்தமுள்ள அனுபவங்கள் - இராம கண்ணப்பன் 14.00
திருக்குறள் எஸ்.என். ஸ்ரீ ராமதேசிகன் தமிழ் ஆங்கிலத் தெளிவுரையுடன் 52.00
திருக்குறள் பரிமேலழகர் உரை 50.00
ராஜீவ் காந்தி - பி.சி. கணேசன் 25.00
வெற்றிச் செல்வி ஜெயலலிதா - பி.சி. கணேசன் 24.00
தேர்வுக்கான பொது அறிவுக் கட்டுரைகள் - பி.சி. கணேசன் 20.00
கங்கை பொது அறிவு நூல் முதல் தொகுதி - பி.சி. கணேசன் 27.00
கங்கை பொது அறிவு நூல் 2-ம் தொகுதி - பி.சி. கணேசன் 22.00
கோபப்படாதீர்கள் - பி.சி. கணேசன் 15.00
முன்னேறிய நாடுகளில் 30 நாட்கள் (பயண இலக்கியம்) சா. கணேசன் 18.00
உரை அலைகள் டாக்டர். எஸ். ஸ்ரீதரன் 20.00
மரைக்காயர் சமூகம் ஓர் ஆய்வு - மு.இ. முகம்மதுஹுசன் 14.00

**கந்தர் சஷ்டி கவசம் (உரையுடன்)**
தேவராய சுவாமிகள் அருளிய கந்தர் சஷ்டி கவசத்தைப் பாராயணம் செய்து அதன் உள்ளர்த்தத்தை உணரும் பொருட்டு உரையுடன் கையடக்கப் பதிப்பாகப் பதிப்பித்துள்ளோம் ரூ. 3.00

**நாவல், கதைகள், சிறுவர் நூல்கள்**

கண்ணாடி கோபுரங்கள் - பாலகுமாரன் 34.00
பொய்ச்சேவல் - டாக்டர் கோவி மணிசேகரன் 14.00
இனியவளே - என். சி. மோகன்தாஸ் 25.00
என் கண்ணில் பாவையன்றோ - உமா சந்திரன் 20.00
ஊமை உணர்வுகள் - அனுராதா ரமணன் 17.00
சிருஷ்டி - அனுராதா ரமணன் 18.00
கைநிறையப் பூ - அனுராதா ரமணன் 17.00
காயாத நிலவுகள் - பி.வி.ஆர் 11.00
பனைமரத்துப் பூக்கள் - தாமரை செந்தூர்பாண்டி 18.00
சாமந்திப் பூவே சௌக்கியமா? - தாமரை செந்தூர்பாண்டி 16.00
பிறந்தநாள் - சு.ரா. 14.00
ஆரம்பம் இப்படித்தான் - உத்தமசோழன் 15.00
காக்கை குருவி எங்கள் சாதி - ராஜகுரு 16.00
உள்ளேன் அம்மா - ராகி ரங்கராஜன் 14.00
ஒன்று பட்டால் உண்டு வாழ்வு - ஜானகி மணாளன் 9.00
பிஞ்சு உள்ளங்கள் - பாணன் 10.00
அறிவுரை கதைகள் - பேராசிரியர் மு. சாயபு மரைக்காயர் 7.00
மௌனம் எனது தாய்மொழி - பகவானந்ததாசன் 22.00

★ தேவையான புத்தகங்களை வி.பி.பி.யில் பெற கடிதம் எழுதுங்கள். வி.பி.பி. தபால் செலவு தனி.

★ கங்கை புத்தக நிலையத்தாரின் இலவச விலைப்பட்டியலுக்கு எழுதுங்கள்.

★ புத்தக வியாபாரிகளுக்கும், பள்ளி, கல்லூரி நூலகங்களுக்கும் தக்க கழிவு உண்டு.

விவரங்களுக்கு :

## கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு, தி. நகர்.
சென்னை - 600 017.

**உங்கள் செல்வம் :**

# மன்மோகன் சிங்குக்கு மதிப்பெண் வழங்குங்கள்!

இந்திய வியாபாரி ஏற்றுமதி செய்யும் பொருளுக்கு டாலர், யென் அல்லது ஸ்டெர்லிங் போன்ற அயல் நாட்டு நாணயத்தில் அவனுக்குப் பணம் கிடைக்கிறது. இதை அவன் ரூபாயாக மாற்றித்தான் இந்தியாவுக்குள் கொண்டு வர வேண்டும். இதற்கு ரிஸர்வ் வங்கி ''ரேட்'' நிர்ணயிக்கிறது. சென்ற ஆண்டு ஜூலையில் அறிவிக்கப்பட்ட ரூபாயின் மதிப்புக் குறைப்புக்கு முன்னால் ஒரு டாலருக்கு ரூ. 18 ம் ஒரு பவுண்டு ஸ்டெர்லிங்குக்கு ரூ. 34 ம் ஏற்றுமதியாளருக்கு அதிகார பூர்வமாகக் கிடைத்தது. தவிர, இறக்குமதியாளரும் அரசிடம் லைசென்ஸ் பெற்று இறக்குமதி செய்யும் போது, இதே விகிதாசாரத்தில் பணம் தந்தனர் - ரூபாயாக.

ஆனால் சென்ற ஜூலையில் ரூபாயின் மதிப்பை அரசு குறைத்தபோது, இந்த விகிதாசாரம் டாலருக்கு ரூ. 26 என்றும் பவுண்டு ஸ்டெர்லிங்குக்கு ரூ. 44 என்றும் மாறிவிட்டது. இதே நேரத்தில் அரசு ஏற்றுமதியை அதிகரிக்க ஊக்கமளிக்கும் விதமாக ''எக்ஸிம்'' பத்திரங்களை வழங்க ஆரம்பித்தது.

எக்ஸிம் பத்திரம் என்பது என்ன? ஒரு ஏற்றுமதியாளர் நூறு ரூபாய் பெறுமானமுள்ள பொருளை ஏற்றுமதி செய்தால், அவருக்கு 30 ரூபாய் மதிப்புள்ள எக்ஸிம் பத்திரம் கிடைக்கும். இதை அவர் தாமே பொருள்களை இறக்குமதி செய்யப் பயன்படுத்தலாம் அல்லது வேறு இறக்குமதியாளருக்கு விற்றுவிடலாம். அப்படி விற்கும் போது அவருக்குக் கூடுதல் விலை கிடைக்கும். இறக்குமதியாளர்கள் முன்பு போல் அரசிடம் லைசென்ஸ் பெற்று இறக்குமதி செய்ய முடியாது என்பதாலும் இந்த எக்ஸிம் பத்திரங்களை மார்க்கெட் டில் வாங்கித்தான் இறக்குமதி செய்ய வேண்டும் என்பதாலும் எக்ஸிம் பத்திரத்துக்கு மார்க்கெட்டில் உள்ள கிராக்கிக்கு ஏற்ப விலை உயரும் அல்லது சற்றுக் குறையும்.

ஓர் உதாரணம் பார்ப்போம். மகேஷ் பத்து லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பொருள்களை ஏற்றுமதி செய்கிறான். அவனுக்கு மூன்று லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள எக்ஸிம் பத்திரங்களை அரசு வழங்குகிறது. இறக்குமதி செய்ய வேண்டிய நிலையில் உள்ள ஒரு நபர் 33⅓ சதம் கூடுதல் விலைக்கு இதனை வாங்குகிறார். அதாவது ஒரு லட்சம் ரூபாய் மகேஷுக்குக் கிடைக்கிறது. மகேஷ் பத்து லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பொருள்களை ஏற்றுமதி செய்ததற்காக அவனுக்கு போனஸ்ஸாக ஒரு லட்சம் ரூபாய் கிடைக்கிறது.

ஆனால் இறக்குமதி செய்கின்ற மதன்லால் மூன்று லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பொருள்களைத் தருவிக்க நாலு லட்சம் ரூபாய் தருகிறான். அயல் நாட்டுக்குப் போவது மூன்று லட்சம், மகேஷுக்குக் கொடுப்பது ஒரு லட்சம். முன்பு லைசென்ஸ் பெற்று இறக்குமதி செய்த போது யாரும் இப்படி கூடுதல் விலை தர அவசியமே இருந்ததில்லை. இப்போதோ கொடுத்தே ஆக வேண்டும். இவ்வாறு அரசு ''எக்ஸிம்'' பத்திரங்களை வழக்கில் கொண்டு வரக் காரணம், இறக்குமதிகளைக் குறைக்க வேண்டும் என்ற நோக்கமே. ஆனால் உற்பத்திக்கு அத்தியாவசியமான மூலப் பொருள்களை இறக்குமதி செய்வோர் இறக்குமதியைத் தவிர்க்க முடியாது. இத்தகைய தொழிலதிபர்கள் இறக்குமதிக்குக் கூடுதல் விலை தர, அது உற்பத்திச் செலவை உயர்த்த, உற்பத்தியாகும் பண்டத்தின் விலை அதிகரித்தது. கடைசியில் அதை வாங்கும் மக்கள்தான் பாதிக்கப்பட்டனர்.



இது ஒரு புறமிருக்க, எக்ஸிம் பத்திரம், ஏற்றுமதி செய்வோருக்கு மட்டுமே வழங்கப்பட்டது. அயல்நாடுகளில் வேலை செய்து சம்பாதித்து, இந்தியாவில் உள்ள உறவினருக்குப் பணம் அனுப்புவோருக்கு எவ்வித அனுகூலமும் இல்லை. வழக்கப்படி அரசு நிர்ணயித்த விகிதாசாரத்தில்தான் ரூபாயாக அவர்கள் உறவினர்கள் இங்கு பெற்று வந்தார்கள். இதனால் ஹவாலா பேரம் அதிகரித்தது. அதாவது அதிகாரபூர்வமான வழிகளில் அல்லாமல் இதர சட்டத்துக்குப் புறம்பான முறைகளில் அயல்நாடுகளிலிருந்து பணம் அனுப்பி, இங்கு ரூபாய்க் கணக்கில் கூடுதல் தொகை பெற்றார்கள்.

இவ்வாறு ஹவாலா வியாபாரம் அதிகரிப்பதைத் தடுக்க எண்ணிய அரசு, தற்போது ஒரு புதிய முறையை அமுல்படுத்துகிறது. இந்த பட்ஜெட்டில் இதனை மன்மோகன் சிங் அறிவித்துள்ளார். இதன்படி பகுதி அளவில் அயல் நாட்டுப் பணத்தை மார்க்கெட் நிலவரப்படி ரூபாயாக மாற்றிக் கொள்ளலாம். இதைத்தான் "Partial Convertibility of Rupee" என்கின்றனர்.

மகேஷ் இப்போது நூறு டாலர் பெறுமானமுள்ள பொருளை ஏற்றுமதி செய்தால், 40 டாலர்களை அரசு நிர்ணயித்துள்ள

விகிதாசாரப்படி ரூபாயாக மாற்ற வேண்டும். மீதமுள்ள 60 டாலர்களை மகேஷ் மார்க்கெட் நிலவரப்படி ரூபாயாக மாற்றிக் கூடுதல் ரூபாய்கள் பெறலாம். இந்த வசதி அயல் நாடுகளில் பணியாற்றிச் சம்பாதித்து, இந்தியாவுக்குப் பணம் அனுப்பும் நபர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டுள்ளது. இதனால் ஹவாலா வியாபாரம் படுத்துவிடும் என்று கருதப்படுகிறது.

மார்க்கெட் நிலவரப்படி ரூபாயாக மாற்றிக் கொள்ள அனுமதிக்கப்படும் 60 டாலர்களை மகேஷ் தானே இறக்குமதிக்குப் பயன்படுத்தலாம் அல்லது இறக்குமதி செய்தே ஆகவேண்டிய நிலையில் உள்ள தொழிலதிபருக்கு, மார்க்கெட் நிலவரப்படி கூடுதல் ரூபாய்கள் பெற்றுக் கொண்டு தரலாம்; அல்லது வியாபார நிமித்தம், தான் வெளிநாடு செல்ல அவசியமிருப்பின் அதற்கும் பயன்படுத்திக் கொள்ளலாம். மார்க்கெட் நிலவரப்படி டாலரை மாற்றும் போது, அதிகார பூர்வமான ரேட்டை விட கிட்டத்தட்ட இருபது சதம் கூடுதல் ரூபாய்கள் கிடைக்கும், ஏற்றுமதியாளருக்கு. இறக்குமதியாளர் இந்தக் கூடுதல் தொகையைக் கொடுத்தாக வேண்டும். இதனால் இறக்குமதி குறையும் என்று கருதப்படுகிறது.

எக்ஸிம் பத்திரங்கள் வழங்கும் முறை ரத்து செய்யப்பட்டு, அதற்குப் பதிலாகத் தான் இந்தப் புதிய முறையை நிதி அமைச்சர் பட்ஜெட்டில் அறிவித்திருக்கிறார். இதில் பல ஓட்டைகள் இருப்பதை ஏற்கெனவே வங்கி நிர்வாகிகளும் பொருளாதார நிபுணர்களும் எடுத்துக்காட்டியுள்ளனர். தவிர, மூலப் பொருள் இறக்குமதி அடிப்படையில், இங்கே தயாராகும் பண்டங்களின் விலைவாசி, கணிசமாக உயரும் என்பதையும் விண்டுரைத்துள்ளனர்.

சென்ற ஜூலையில்தான் அமுல்படுத்தப்பட்ட எக்ஸிம் பத்திரங்கள் திட்டத்துக்கு, இன்னும் சிறிது அவகாசம் அளித்துப் பார்த்திருக்க வேண்டும் என்றும், பொருளாதார ரீதியில் அடிக்கடி மாற்றங்களைச் செய்வது அயல்நாட்டினருக்கு நம்மிடம் நம்பிக்கை குறையவே வழி வகுக்கும் என்றும் பலர் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

இந்தப் புதிய திட்டம் காரணமாக நமது அந்நியச் செலாவணி நிலைமை மேலும் மோசமாகும் வாய்ப்பும் உண்டு. நமது அந்நியச் செலாவணி கையிருப்பின் மிகப் பெரும் பகுதி, கடன் வாங்கிய பணமே. நமது ஏற்றுமதியோ இறக்குமதியை விட இன்னும் அதிகமாகவில்லை. குறைவாகவே உள்ளது. இதையெல்லாம் பார்க்க, அரசு அவசரப்பட்டு விட்டதாகவும் பல பொருளாதார நிபுணர்கள் அஞ்சுகின்றனர்.

அரசு சரியான முடிவு எடுத்துள்ளதா இல்லையா என்பதை, அந்நியச் செலாவணி மார்க்கெட்டில் ரூபாயின் மதிப்பு ஸ்திரப்படுகிறதா அல்லது வீழ்ச்சி அடைகிறதா என்பதை வைத்துத்தான் நிர்ணயிக்க முடியும். அத்துடன் இறக்குமதி செய்யப்படும் பொருள்களுக்கு எவ்வளவு கூடுதல் விலை தர வேண்டியிருக்கிறது என்பதையும் பார்க்க வேண்டும். இவற்றின் அடிப்படையில் அரசின் நடவடிக்கைக்குப் பொருளாதார வல்லுனர்கள் மதிப்பெண் வழங்கும் நாள் அதிக தூரத்தில் இல்லை.

- வி. கோபாலன்

---

## பொன்விழா ஆண்டு :: தங்க நகை பரிசுத் திட்டம் - 18



### விடுமுறையில் ஒரு விளையாட்டு

சென்ற ஆண்டோ அல்லது அதற்கு முன்னரோ கோடை விடுமுறையில் புதிதாக ஒரு விளையாட்டைக் குழந்தைகளுடன் (அல்லது பெரியவர்களுடன்) பொழுது போக்காக விளையாடினீர்களா? அது பற்றி எழுதுங்களேன். மற்றவர்களுக்கும் இந்த ஆண்டு உதவியாயிருக்கும். ''விடுமுறையில் ஒரு விளையாட்டு'' என்று தலைப்புத் தந்து, தபால் கார்டு அல்லது அதிகபட்சம் இன்லாண்டில் எழுதி அனுப்பக் கடைசி தேதி : மார்ச் 30, 1992. சுவாரஸ்யமான சிறந்த விளையாட்டுக்கு பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்க நகை பரிசு. பிரசுரமாகும் இதர துணுக்குகளுக்கு வழக்கமான சன்மானம். ''கல்கி காரியாலயம், சென்னை - 600 032'' என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுத வேண்டும்.




கல்கி



பாலு ஜுவல்லர்ஸ்

# தமிழக காங்கிரஸ் இழந்த பெருமையை மீட்க...



## வழி சொல்கிறார் ம. பொ. சி.

''தமிழ்நாட்டில் காங்கிரஸ் மிகவும் குழப்பமான சூழ்நிலையில் இருப்பது உண்மைதான். கட்சி வலிமையுடனும், தனித்தன்மையுடனும் விளங்க வேண்டும் என்று என்னைப் போன்ற தேசியவாதிகள் விரும்பினாலும், பல காரணங்களால் இது போன்ற நிலை ஏற்படாமல் இருக்கிறது.

''கோஷ்டித் தகராறுகள் ஒரு பக்கம் கட்சியின் வளர்ச்சியைத் தடை செய்து கொண்டிருக்கின்றன. அந்தக் காலத்திலும் காங்கிரஸில் கோஷ்டிப் பூசல்கள் இருந்தன. ஆனால் கொள்கைகளின் அடிப்படையில்தான் கோஷ்டிகள் பிரிந்திருந்தனவே தவிர, தனி மனிதர் அரசியல் கிடையாது. இன்று எல்லாத் தரப்பினரையும் கவர்ந்திழுக்கக் கூடிய, செல்வாக்குள்ள, வலிமையான ஒரு தலைவர் தமிழ்நாடு காங்கிரஸுக்கு இல்லாததும் கோஷ்டிப் பூசல் வளர ஒரு காரணம். சுதந்திரப் போராட்டத்தின் மூலம் காங்கிரஸுக்குப் பல தலைவர்கள் கிடைத்தார்கள். ஆனால் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை காமராஜுடன், அந்தத் தலைவர்களின் வரிசை முடிந்து விட்டது.

''திராவிட இயக்கங்களுடன் தேர்தல் கூட்டு வைத்துக் கொள்வதும் கட்சி வளர்ச்சியைப் பாதித்திருக்கிறது. தேசியத்தை நம்பும் காங்கிரஸும் திராவிட பாரம்பரியத்தை வலியுறுத்தும் மாநிலக் கட்சியும் ஒன்று சேர்ந்து தேர்தல் கூட்டு வைத்துக் கொள்வது ஒரு விசித்திரமான நிலைதான். மத்தியில் எப்படியாவது ஆட்சிக்கு வந்தால் போதும், மாநிலங்களைப் பற்றிக் கவலையில்லை என்று கூட்டுச் சேருகிறது. மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள், உரிமைகள் கேட்க வேண்டிய திராவிட இயக்கங்கள், பாராளுமன்றத்துக்கு நிறைய இடங்களைக் காங்கிரஸுக்கு விட்டுக் கொடுத்து விட்டுக் குறைவாகவே போட்டியிடுகின்றன. இதுவும் வேடிக்கையான நிலைதான். வேறு எந்த மாநிலத்திலும் மாநிலக் கட்சிகளுடன் காங்கிரஸ் தொடர்ந்து கூட்டு வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

''மூப்பனார் தலைமையில் 1989 இல் சட்டமன்றத் தேர்தலில் காங்கிரஸ் தனித்துப் போட்டியிட்டது. அது தவறு என்று சொல்ல மாட்டேன். காங்கிரஸ் சொந்தக் காலில் நிற்க வேண்டும் என்ற நல்ல நோக்கில் செய்யப்பட்ட ஏற்பாடு. ஆனால் கட்சியின் நிலையைக் கருத்தில் கொண்டுக் கொஞ்சம் யோசித்திருக்கலாம். அந்த நேரம் (timing) சரியில்லை. வாழப்பாடி ராமமூர்த்தி அவர்களுக்கும் காங்கிரஸ், தேர்தலில் தனித்துச் செயல்பட வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. ஆனால் அதற்குமுன் கட்சி வலிமையாக விளங்க வேண்டுமென்று நினைக்கிறார். இதற்குச் செய்ய வேண்டியது என்ன?

''தமிழ்நாடு காங்கிரஸில் அடிமட்டத்திலிருந்து தலைவர் வரை கட்சித் தேர்தல் நடத்தி நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்குப் பழைய கோஷ்டிப் பூசல்களையெல்லாம் மறந்து எல்லோரும் தோள் கொடுக்க வேண்டும். தலைவர்களும் மற்றவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு கட்சி மேலிடம் நுழைந்து குட்டை குழப்பக் கூடாது. தமிழ்நாடு காங்கிரஸ் தலைவருக்கு அதிகாரங்கள் கொடுக்க வேண்டும்.

''சில திட்டங்கள் மூலமாகத்தான் மக்களைக் கவர முடியும். மாநிலத்தில் எதிர்க்கட்சியாக இருக்கும் போதே கட்சியை வளர்க்க நல்ல வாய்ப்பு இருக்கிறது. கிராம அளவிலிருந்து தொடங்கி, மக்கள் பிரச்னைகளை ஆட்சியாளர்கள் மத்தியில் எடுத்து வைத்துத் தீர்வு காண முயல வேண்டும். சமுதாய நலத் திட்டங்கள் அனைத்தையும் அரசுதான் செயல்படுத்த வேண்டும் என்றில்லை. படிப்பறிவுத் திட்டம், வைத்திய உதவி போன்ற சிலவற்றைக் காங்கிரஸ் கட்சியும் செயல்படுத்தலாம். வன்முறைக்கு எதிராகவும், தேச ஒற்றுமையை வலியுறுத்தியும், பலமான பிரசாரம் செய்து மக்களைக் கவரலாம். இவைகளைச் செய்யக் கட்சியில் ஒற்றுமையும் கடினமான உழைப்பும் தேவைப்படும். இந்த ரீதியில் இப்போதே செயல்படத் தொடங்கினால் இன்னும் சில ஆண்டுகளில் தமிழ்நாட்டில் காங்கிரஸ் வலிமையுடன் திகழும் என்பதில் சந்தேகம் இல்லை.

சந்திப்பு : ப்ரியன்

சார்மினார் சானல் :

# விஜயகாந்த் படங்களுக்கு ஏக கிராக்கி



சார்லஸ் - டயானா : குசேலரின் அவலும் குபேரரின் முத்தும்.....

●● மக்கள் யுத்தக் குழு (PWG) வின் தலைமறைவாயுள்ள தலைவர் கொண்டப் பள்ளி சீதாராமையா, நக்சலைட்டுகள் முக்கியஸ்தர்களைக் கடத்திக் கொண்டு போவது, கொல்வது, தனி மனித வன்முறை ஆகியவற்றை எதிர்த்து வெளியிட்டுள்ள அறிக்கை நக்சலைட்டுகளுக்குள் அதிர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. அவரை ஆதரிக்காத குழு, அவரைத் தலைவர் பதவியிலிருந்து நீக்கியுள்ளது. இதனால் ஆதரவு, எதிர்க் குழுக்கள் தங்களுக்குள் சண்டையிட்டுப் பலியாகிறார்கள். இதிலிருந்து தப்பிக்க பல நக்சலைட் இளைஞர்கள் போலீசில் சரணடைந்து வருகிறார்கள்.

●● இங்கிலாந்து இளவரசர் சார்லஸ், டயானா வந்தபோது அவர்களுடன் வந்த உதவியாளர்கள் எண்ணிக்கை 200. அவர்கள் தங்கியிருந்த ஹோட்டல் ஒன்று, பம்பாயிலிருந்து பிரத்தியேகமாகப் பன்னிரண்டு சமையல் காரர்களை வரவழைத்தது. செருப்புத் தைக்கும் தொழிலாளி ஒருவர் வீட்டில் சார்லஸ் நுழைந்த போது, அந்தத் தொழிலாளி கார் டயரால் செய்த செருப்பொன்றை சார்லஸுக்குப் பரிசளித்தார். பிரதமரின் மகன் ரங்காராவ் முத்து நெக்லஸ் பரிசளித்தார். குசேலரின் அவலும், குபேரரின் முத்தும்!

●● ஆஸ்தான பாடகர் பதவியை என்.டி..ஆர் ஒழித்தபின், ஆந்திராவில் பாடப்போவதில்லை என்றார் பாலமுரளி கிருஷ்ணா. பத்து வருட இடைவெளிக்குப் பின் மீண்டும் பாடுகிறார். கர்நாடக இசை ரசிகர்களுக்குப் புது வெள்ளம். ஹைதராபாத் சரோஜினி நாயுடு மத்திய பல்கலைக் கழகத்தில் சிறப்பு விரிவுரையாளர் பதவியும் கிடைத்திருக்கிறது, பாலமுரளிக்கு.



விஜய்காந்த் : ஊக்குவிப்பு ஜெயப்பிரதா



ஜெ : 50 ஏக்கர் திராட்சைத் தோட்டம்

●● இந்தியாவின் திராட்சை நகரம் - ஹைதராபாத். சீசனில் கிலோ இரண்டு ரூபாய்க்குக் கூட திராட்சை கிடைக்கும். இவ்வாண்டு நல்ல ரக திராட்சைகள் கிடைக்கவில்லை. ஹரியானா போன்ற மாநிலங்களுக்கு அவற்றைக் கொண்டு சென்று ஒரு கிலோ 25 ரூபாய் வரைக்கும் விற்றிருக்கிறார்கள். தமிழக முதல்வருக்கும் இங்கு 50 ஏக்கர் திராட்சைத் தோட்டம் இருக்கிறது.

●● விஜய்காந்தின் டப் செய்யப்பட்ட படங்களுக்கு நல்ல கிராக்கி. ''கேப்டன் பிரபாகரன்'' நல்ல கலெக்ஷனைக் குவித்திருக்கிறது. இதைத் தொடர்ந்து விஜய்காந்த் தெலுங்குப் படங்களில் நடிக்க ஒப்பந்தமாகியுள்ளார். ஊக்குவிப்பு : ஜெயப்பிரதா!

- அப்பன்

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.




"மிகக் குறுகிய காலத்தில் நான் மிகப் பெரிய பதவி உயர்வினைப் பெற்றதற்கு அதிர்ஷ்டம் தான் காரணம் என்று மற்றவர்கள் சொல்கிறார்கள். ஆனால்... ஒரு மனிதனின் முன்னேற்றத்திற்கு அதிர்ஷ்டம் மட்டுமே காரணமாக அமைந்துவிடுவதில்லை என்பதே என் கருத்து"

சில வருடங்களுக்கு முன் நான் ஒரு பிரபல வர்த்தக நிறுவனத்தில் சாதாரண குமாஸ்தாவாகச் சேர்ந்தேன்.

நான் பணிபுரியும் நிறுவனத்தில் நல்ல திறமையுடையவர்களுக்குத் தகுந்த வேலைவாய்ப்புகள் இருப்பதை அறிந்து, உயர்பதவியினைப் பெற ஆர்வமுடன் செயலாற்றினேன்.

ஆனால்... உயர்பதவிகளைப் பெற ஆங்கிலத்தில் போதிய புலமை பெற்றிருப்பது அவசியம் என்பதை நாளடைவில் புரிந்துகொண்டேன்.

"நமக்குத்தான் ஆங்கிலத்தில் தொடர்ந்து நாலு வார்த்தை கூடப் பேச வராதே" என்று எனது முயற்சியை நான் கைவிட்டுவிடவில்லை.

ஆங்கிலத்தைக் கற்றுக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டு, பல புத்தகங்களை வாங்கிப் படித்தேன். ஆனால் இம் மொழியை முழுமையாகப் புரிந்து கொள்ள முடியாமல் கலங்கிக் கொண்டிருந்தேன்.

திசை தெரியாமல் நடுக்கடலில் தத்தளிக்கும் படகோட்டிக்கு கலங்கரை விளக்கம் தென்பட்டதைப் போல, விவேகானந்தா கல்வி நிலையத்தின் ஆங்கிலப் பயிற்சி பற்றிய விளம்பரம் என் கண்ணில் பட்டது.

முயற்சி செய்பவர்களுக்குத் தெய்வம் வலிய வந்து உதவும் என்ற குறளிற்கேற்ப, ஆங்கில மொழியில் புலமை பெற வேண்டும் என்ற எனது முயற்சி வெற்றி பெற விவேகானந்தா கல்வி நிலையத்தின் தபால் முறைப் பயிற்சி பெரிதும் உதவியது.

இப் பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது எந்தச் சூழ்நிலையிலும் தயக்கமின்றி ஆங்கிலத்தில் மிகச் சரளமாகப் பேச முடிகிறது. இதனால் உயர்பதவி என்னைத் தேடி வந்துள்ளது.

எனவே எனது வெற்றியின் ரகசியம் விவேகானந்தா கல்வி நிலையத்தின் ஆங்கிலப் பயிற்சி தான் என்பதில் மிகையேதும் இல்லை அல்லவா?

கீழ்க்கண்ட முகவரியில் நீங்களும் தொடர்பு கொண்டு பயன் பெறலாமே!

---

**விவேகானந்தா கல்வி நிலையம்,**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

"நேர்முகப் பயிற்சியும் உண்டு."

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka